கழக வெளியீடு: ௬௨௯





சிவஞான முனிவர்
இயற்றிய

# தொல்காப்பியச்
# சூத்திர விருத்தி

சென்னை, பச்சையப்பன்
கல்லூரி உயர்நிலைப் பள்ளித்
தலைமைத்
தமிழாசிரியராயிருந்த

திரு. கா ர

கோவிந்தராச முதலியார்

எழுதிய வி[illegible]ன்

அவர்கள்

THE SOUTH INDIA
SAIVA SIDDHANTA WORKS
PUBLISHING SOCIETY
TINNEVELLY LTD.

TIRUNELVELI
& MADRAS.



Price Rs. 1—4—0.

கழக வெளியீடு: ௪௨௯

௨

# சிவஞான முனிவர்

இயற்றிய

# தொல்காப்பியச் சூத்திர விருத்தி



சென்னை, பச்சையப்பன் கல்லூரி

உயர்நிலைப் பள்ளித்

தலைமைத்

தமிழாசிரியராயிருந்த

திரு. கா. ர.

கோவிந்தராச

முதலியார் அவர்கள்

எழுதிய

குறிப்புக்களுடன்






திருநெல்வேலித்
தென்னிந்திய சைவ
சித்தாந்த
நூற்பதிப்புக்
கழகம், லிமிடெட்
திருநெல்வேலி &
சென்னை. *First*

ஓம்

# முகவுரை



அறுபத்து நான்கினையும்
ஏய வுணர்விக்கும்
என்னம்மை—தூய
உருப்பளிங்கு

போல்வாளென்
உள்ளத்தி னுள்ளே
இருப்பளிங்கு
வாரா திடர்.
உலகின்கண் நன்கு
அமைந்த மொழிகள்
எல்லாவற்றினும்
உள்ள பலவகையாகிய
கலைகளைச் செவ்விதின்
உணர்தற்கு
மொழியுணர்ச்சி
நன்கமைதல் வேண்டும்.
மொழியுணர்ச்சி நன்

கமைதற்கு அவ்வம்
மொழியின் இலக்கண
உணர்ச்சி யின்றி
யமையாதது ஆகும்.
அதனை,
''எழுத்தறியத் தீரும்
இழிதகைமை தீர்ந்தான்
மொழித்திறத்தின்
முட்டறுப்பா
னாகும்—மொழித்திறத்
முட்டறுத்த
நல்லோன் முதனூற்
பொருளுணர்ந்து [தின்

கட்டறுத்து வீடு
பெறும்''

என்றதனல் அறிதலாம்.

இலக்கணமாவது ஒரு மொழியின் இயற்கை உருவைத் தெரிவிப்பதேயாகும். தமிழ் மொழியின் உயிர் எழுத்துக்கள் பன்னிரண்டு என்று இலக்கணம் கூறியது என்னின், தமிழ் மொழி யில் உயிர் எழுத்துக்கள்

பன்னிரண்டு இருப்பதை நோக்கி இலக் கணம் அங்ஙனம் கூறியதேயன்றி, இலக்கணம் தமிழ் மொழிக்கு உயிர் எழுத்துப் பன்னிரண்டு இருத்தல்வேண்டும் என்று விதிக்க, அதனால் தமிழ் மொழியின்கண் பன்னிரண்டு உயிரெழுத்துக்கள் அமைத்துக்கொள்ளப்பட்டன அல்ல. இங்ஙனமே

மற்றவை களையும் நோக்கி உணர்க.

4

நன்னூலாசிரியர்,

"இலக்கியங் கண்டதற்கு இலக்கணம் இயம்பலின்"
(நன். எழுத்து. பதவியல், சூ. 14)

என்றதற்கும் இதுவே கருத்து ஆதல் அறிக. ஆசிரியர் அகத்திய னார், "எள்ளினின்று எண்ணெய் எடுபடுவதுபோல இலக்கியத்தி னின்று இலக்கணம் எடுபடும்" என்றார்.

இலக்கணம் மொழியின் இயற்கை உருவைக் கூறுவதாயின், இலக்கண ஆசிரியர்கள் சில இடங்களில் ஒருவரோடு ஒருவர் மாறுபடுவதற்குக் காரணம் என்னை எனின், ஓர் ஆவை, ஆவின் இயல்புகளை உணர்ந்தார் சிலரிடம்

கொண்டுபோய்விட்டு, 'இதன் குண குற்றங்களைக் கூறுமின் எனின், அவர்கள் அனைவரும் எல்லா வகையினும் ஒரேவிதமாக அதன் குண குற்றங்களைக் கூறுதல் அரிது. சில வகைகளில் ஒருவர் கூறியதனோடு மற் றொருவர் கூறுவது மாறியிருத்தலை நாம் காண்போம். இதற்குக் காரணம் அதனை நோக்கும் அன்னாரின் உணர்ச்சியின்

வேறு பாடேயாகும். அதுவே இலக்கண ஆசிரியர்களின் வேறுபாட் டிற்கும் காரணமாகும்.

தமிழ் மொழிக்கு அகத்திய முனிவரே முதலில் இலக்கணம் இயற்றினர் என்பர் ஒருசாரார். அதனை, இவ்வுரையாசிரியராகிய சிவஞான முனிவர் பாயிர விருத்தியில், "செந்தமிழ் மொழி நிலத்து

தோன்றுங்காலத்து உடன்தோன்றிய நூல் அகத்தியம் ஒன்றே ஆகலானும், ஏனை நூல்கள் எல்லாம் அகத்தியத்தின் வழித்தோன்றியனவே ஆகலானும்,'' என்றதனால் அறிக.

மற்றொருசாரார், அகத்தியர் இலக்கணம் இயற்றுதற்கு முன்பே தமிழிற் பல இலக்கணங்கள் இருந்தன. அகத்தியர் அவற்றையெல்லாம் கற்றுணர்ந்து அவைகள் எல்லாவற்றினும் சிறந்ததாகிய இலக்கணம் இயற்றித் தமிழை வளர்த்தனர் என்பர்.

5

அதனைக் கம்பநாடர்,

"நின்றவனை
வந்தநெடி யோனடிப

ணிந்தான்

அன்றவனு

மன்பொடு தழீஇயழுத

கண்ணுன்

நன்றுவர

வென்றுபல நல்லுரைப

கர்ந்தான்

என்றுமுள

தென்றமிழ் இயம்பியிசை

கொண்டான்"

(ஆரணியகாண்டம்,

அகத்தியப்படலம், செ. 47)

என்று கூறியதனுல்

அறிக. அகத்தியமுனிவர் இயற்றிய இலக்கணம் மற்றை எல்லா இலக்கணங்களினும் சிறந்து விளங்கினமை புலப்படுத்தவே "இசைகொண்டான்" என்றனர் கம்பர் என்பது.

அகத்தியத்துள், இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழ்க்கும் ஒருங்கு இலக்கணங் கூறப்பட்டிருந்தன

என்பதும், பண்டைக்
காலத்து, மாபுராணம்
பூதபுராணம் என்னும்
இலக்கணங்களி
னும் முத்தமிழ்க்கும்
ஒருங்கு இலக்கணங்கள்
கூறப்பட்டிருந்தன
என்பதும்,
தொல்காப்பியத்திற்குப்
பேராசிரியரும் நச்சினார்க்
கினியரும் எழுதிய
உரைகளால் தெரிகின்றன.

அகத்தியர்

மாணாக்கர்களுள் ஒருவராகிய ஆசிரியர் தொல்காப்பியர், அவற்றுள் இயற்றமிழை வேறுபிரித்து இயற்றினர். பெருநாரை, பெருங்குருகு முதலிய நூலாசிரியர்கள் இசைத் தமிழை வேறுபிரித்து இயற்றினர். முறுவல், சயந்தம், குணநூல், செயிற்றியம் என்னும் நூல்களின்

ஆசிரியர்கள் நாடகத்
தமிழை வேறுபிரித்து
இயற்றினார்கள் என்பர்.
முற்கூறிய
பண்டை
இலக்கணங்களுள்,
தொல்காப்பியம் நீங்கிய
மற்றை
நூற்களின் சிலசில
சூத்திரங்கள்
காணப்படுகின்றனவே
அன்றி,
அந்நூற்கள் முழுதும்

காணப்பட்டில. பண்டை இலக்கணங்க ளுள் தொல்காப்பியம் ஒன்றே அழிவின்றி முழு உருவினையும் பொலிவுறக் காட்டிக்கொண்டு விளங்குகின்றது. முன்னை இலக் கணங்களுள் மற்றை இலக்கணங்கள் அழிந்தனவாகவும், தொல் காப்பியம் அழியாமல் இருத்தலை நோக்கின், தமிழ்

அறிஞர்கள்

அதனைக் கண்ணின்மணி

யெனக் காத்து வந்தனர்

என்பதும்,

மற்றவற்றினும்

அதனையே

இனிதெனக்கொண்டு

பயின்று வந்



தனர் என்பதும் புலனாகின்றன. இப்பொழுது உள்ள இலக்கணங்களுள் மற்றை எல்லாவற்றினும் தொல்காப்பியமே சிறந்த

தாகும்.

தொல்காப்பியம், எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரம் என்னும் மூன்று பெரும் பிரிவுகளை உடையது. அதற்கு, உரையாசிரியர் என்று போற்றிப் புகழப்படும் [1]இளம்பூரணர், [2]சேனாவரையர், [3]பேராசிரியர், [4]நச்சினார்க்கினியர், [5]தெய்வச்சிலையார், [6]கல்லாடர் என்னும் அரும்புலச் செல்வர்கள் உரை இயற்றியிருக்கின்றார்கள்.

சற்றேறக்குறைய நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன் தமிழ்நாட்டிற் சிறப்புற விளங்கியவரும், வடமொழி தென்மொழி என்னும் இரு மொழிகளையும் நன்கு கற்றுணர்ந்து இருமொழிக்கடல் என விளங்கியவரும், தர்க்க நூற்கள் தத்துவ நூற்கள் முதலிய பிற நூற்களையும் நன்கு

பயின்றவரும்
ஆகிய சிவஞான முனிவர்,
மேற்கூறிய தொல்காப்பிய
உரைகள்
பலவற்றையும் நன்கு
நோக்கி, அவ்வுரைகளில்
தமக்கு மாறு எனத்
தோன்றுவனவற்றை
மறுத்தும், தமது
நுண்மதியால்
அறிந்த பல அரும்
பொருள்களைக் கூட்டியும்,
தொல்காப்பியத்

இன் பாயிரத்திற்கும் முதற்சூத்திரத்திற்கும் இந்த விருத்தி உரையை இயற்றினர். | இவர் தம் உரையில் தொல்காப்பிய உரையாசிரியர்களுள், இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் என்னும் இம்மூவரையே குறிக்கின்றனர். இவர், தமிழ் இலக்கணங்கள் வடமொழியோடு மாறுகோடல் ஆகாது என்னும் கருத்துடையவராயினும்,

"தமிழ்நூற் களவிலை
அவற்றுள்,
ஒன்றே யாயினும்
தனித்தமிழ் உண்டோ ?
அன்றியும்
ஐந்தெழுத் தால்ஒரு
பாடையென்
றறையவே நாணுவர்
அறிவுடை யோரே"

என்று கூறிய சாமிநாத தேசிகரைப்போன்றவர் அல்லர். தமிழ் மொழியின் இலக்கணம் வேறு, வடமொழியின் இலக்கணம் வேறு என்னும் கருத்தே கொண்டவர் ஆவர்.

7

A93

இவர் அவ்வகைக் கருத்துக்கள் உடையவர் என்பதனை முதற்சூத்திர விருத்தியில்,

"அற்றேல்,
பெயரி னாகிய தொகையும்"

என்ற உம்மையாற்

பெயரொடு வினைதொக்க
தொகையும் உள என்பது
பெறப்படுமாலோ எனின்,
‘அவ்வும் உரிய’

என்றதற்கு ஏலாமையானும்,
வடநூலோடு
மாறுகோடலானும்,
அவ்வும்மைக்கு அது
பொருள் அன்று’’ (பக்கம்
73) எனவும்,

பாயிர விருத்தியில்
‘‘ஐந்திரம் நோக்கித்

தொகுத்தான் எனின், தமிழ் மொழிப்புணர்ச்சிக்கட்படும் செய்கைகளும், குறியீடுகளும், வினைக்குறிப்பு, வினைத்தொகை முதலிய சொற்பாகு பாடுகளும், அகம் புறம் என்னும் பொருட் பாகுபாடுகளும், குறிஞ்சி, வெட்சி முதலிய திணைப்பாகுபாடுகளும், அவற்றின் பகுதிகளும், வெண்பா முதலிய செய்யுள்

இலக்கணமும், இன்னோ
ரன்ன பிறவும்
வடமொழியிற்
பெறப்படாமையானும்,
இவை
யெல்லாம் தாமே
படைத்துக்கொண்டு
செய்தார் எனின், 'முந்து
நூல் கண்டு' என்பதனோடு
முரணுதலானும்,
முற்காலத்து முதல்
நூல் அகத்தியம்
என்பதூஉம், அதன்

வழித்தாகிய தொல்காப்பியம் அதன் வழி நூல் என்பதூஉம் துணியப்படும் என்க,''
எனவும் கூறியவற்றான் அறிக.

இவர் இயற்றிய வேறு நூற்கள் :—இலக்கண விளக்கச் சூறாவளி, புத்தம் புத்துரை என்னும் நன்னூல் விருத்தியுரை, சிவஞானபோத மாபாடியம், காஞ்சிபுராண

முதற்காண்டம், சோமேசர் முதுமொழி வெண்பா முதலியன.

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் "தொல்காப்பியச் சூத்திர விருத்தி" என்னும் இந்நூலின் பிரதி யொன்றை என் பால் தந்து நன்கு பரிசோதித்து மாணாக்கர்களுக்கு இதன்

பொருள் இனிது விளங்கும்படி செய்வன செய்து தரல் வேண்டும் என்று கேட்டுக்கொண்டனர். யான் அவ்வாறே அதன் பொருள் மாணாக்கர்களுக்கு இனிது விளங்கும்படி பிரிக்க வேண்டிய இடங்களிற் பிரித்து, இதிற் சிவஞான முனிவரால் அமைக்கப் பட்ட விடயங்களுக்குத் தலைப்புகள் அமைத்து, மேற்கோட் சூத்திரங்களுக்கு இடங்குறித்து இதில் என்னால் இயன்றன செய்து முடித்தேன்.

இத்தொண்டை எனக்களித்த சைவ சித்தாந்த நூற்பதிப் புக் கழகத்தார்க்கு என் அன்போடு கூடிய நன்றியைச் செலுத்து கின்றேன். இதிற் பிழைகள் காணப்படின் என்னை மன்னிக்க என அறிஞர்களை வேண்டுகின்றேன்.

எனது இம்முயற்சியை இடையூறு இன்றி இனிது முடியத் திருவருள் புரிந்த திருமகள் நாதன் திருவடித் தாமரைகளை வழுத்தி வணங்குகின்றேன்.

[redacted]

இங்ஙனம்:

கா. ர. கோ.

பக்கம்.

க. தொல்காப்பியச்

சூத்திர விருத்தி

... க

உ.

ரு.

தற்சிறப்புப் பாயிரம்

சிறப்புப் பாயிரம்

... ,,

... ,,

சு.

எழுத்திலக்கணமும், சொல்லிலக்கணமும்
போலப் பொருள் இலக்கணமும் இன்றி

யமையாதது என்பது

௨௦. நூன்மரபு

௨௧. அநுவாதம்

௨௨. பெயரும் பொருளும்

௨௩. முறை

௨௪. மெய் எழுத்துக்கள்

௨௫. உயிரும் மெய்யும்

௨௬. உயிரெழுத்துக்கள்

௨௭. நெட்டெழுத்தும் அளபெடையும்

௨௮. முப்பஃது என்னும் தொகை

௨௯.

௩௦.

தொல்காப்பியச் சூத்திர விருத்தி.



# தற்சிறப்புப் பாயிரம்

எங்கு மாய்நிறைந் தொளிமுதற் கடவுளை யிறைஞ்சிப்
பொங்கு பேரருட் குரவனைப் புந்தியில் நிறுவித்
தூங்க மல்குதொல் காப்பியச் சூத்திர விருத்தி
இங்கு வாழியற் றமிழ்வலோர் மகிழ்தர விசைப்பாம்.

# சிறப்புப் பாயிரம்

## "வலம்புரி முத்தின் குலம்புரி பிறப்பும்

வான்யா றன்ன தூய்மையும் வான்யாறு
நிலம்படர்ந் தன்ன நலம்படர் ஒழுக்கமும்
திங்க ளன்ன கல்வியுந் திங்களொடு
ஞாயி றன்ன வாய்மையும் யாவதும்

அஃகா அன்பும் வெஃகா உள்ளமும்
துலைநா அன்ன சமநிலை உளப்பட
எண்வகை உறுப்பின ராகித் திண்ணிதின்
வேளாண் வாழ்க்கையும் தாஅ ளாண்மையும்
உலகிய லறிதலும் நிலைஇய தோற்றமும்
பொறையும் நிறையும் பொச்சாப் பின்மையும்
அறிவும் உருவும் ஆற்றலும் புகழும்
சொற்பொருள் உணர்தலும் சொல்வன் மையும்
கற்போர் நெஞ்சம் காமுறப் படுதலும்
இன்னோ ரன்ன தொன்னெறி மரபினர்

பன்னருஞ் சிறப்பின்

நல்லா சிரியர்

அறனே

பொருட்பயன்

இன்பெனு மூன்றின்

உ

திறனறி பனுவல் செப்புங் காலை
முன்னர்க் கூறிய எண்வகை உறுப்பினுள்
ஏற்பன உடைய ராகிப் பாற்படச்
௧சொல்லிய பொருண்மை சொல்லியாங் குணர்தலும்
௨சொல்லிய பொருளொடு சூழ்ந்துநன் குணர்தலும்
௩தன்னோர் அன்னோர்க்குத் தான்பயப் படுதலும்
௪செய்ந்நன்றி யறிதலுந் ௫தீச்சார் பின்மையும்
௬மடி, தடு மாற்றம் மானம்பொச் சாப்புக்
கடுநோய், சீற்றம் களவே காமம்
என்றிவை இன்மையும் ௭சென்றுவழி படுதலும்
௮அறத்துறை வழாமையும் ௯குறிப்பறிந் தொழுகலும்
௧௦கேட்டவை நினைத்தலும் ௧௧பாடம் போற்றலும்
௧௨மீட்டவை வினவலும் ௧௩விடுத்தலும் ௧௪உரைத்தலும்
உடைய ராகி நடையறிந் தியலுநர்
நன்மா ணாக்கர் என்ப மண்மிசைத்
தொன்னூற் புலமைத் துணிபுணர் வோரே"

என ஆத்திரையன் பேராசிரியன் கூறிய பொதுப்பாயிரத்தானே பன்னருஞ் சிறப்பின் நல்லாசிரியனை உணர்ந்து வழிபட்டு ஒரு நூல் கேட்பான் புகுந்த நன்மாணாக்கர்க்கு, அந்நூலான் நுவலப் படும் பொருளும் நூல் கேட்டலாற் பெறப்படும் பயனும், கேட்டற்குரிய அதிகாரிகளாவார் இவர் என்பதூஉம், இன்னது முற்றிய பின்னர் இந்நூல் கேட்கற்பாற்று என்னும் இயைபும் உணர்ந்தன்றி நூல் கேட்டற்கண் மனவூக்கஞ் செல்லாமையின், இன்றியமையாச் சிறப்பினவாய இந்நான்கும் ஒருதலையாக முன்னர் உணர்த்தல் வேண்டும். இந்நான்கும் உணர்ந்தவழியும் கற்று வல்ல சான்றோரல்லாராற் செய்யப்பட்ட நூலாயிற் கூறியது

கூறல் முதலிய குற்றம் உடைத்தாம் அன்றே எனவும், கற்று வல்ல சான்றோரும் மற்றோர்கோட்பாடு பற்றிச் செய்யின் முனே வன் நூலொடு முரணும் அன்றே எனவும் ஐயுற்று ஊக்கஞ் செல்லாமையின், அவ்வையம் நீக்குதற்பொருட்டு, ஆக்கியோன் பெருமையும் நூற்பெருமையும் அந்நூல் வழங்கும் நிலமும், அதன் முதல் நூலும், இவை என்பது தோன்ற ஆக்கியோன் பெயரும், வழியும், எல்லையும், நூற்பெயரும் உணர்த்தல்வேண்டும் ஆகலின், இவ்வெட்டுந் தெரிப்பதாகிய சிறப்புப்பாயிரம் இந் நூற்குப் பனம்பாரனாராற் கூறப்பட்டது.

# தொல்காப்பியப் பாயிர விருத்தி ௫

வடவேங்கடம்
தென்குமரி

ஆயிடைத்
தமிழ்கூறு நல்லுலகத்து

வடக்கும் செய்யுளும் ஆயிரு முதலின்
எழுத்தும் சொல்லும் பொருளும் நாடிச்
செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு
முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணிப்

# புலந்தொகுத் தோனே போக்கறு பனுவல்

நிலந்தரு திருவிற் பாண்டியன் அவையத்(து)
அறங்கரை நாவின் நான்மறை முற்றிய

அதங்கோட் டாசாற் கரிறபத் தெரிந்து
மயங்கா மரபின் எழுத்துமுறை காட்டி
மல்குநீர் வரைப்பின் ஐந்திரம் நிறைந்த
தொல்காப் பியனெனத் தன்பெயர் தோற்றிப்
பல்புகழ் நிறுத்த படிமை யோனே.

(இதன் பொருள்.) வட வேங்கடம் தென் குமரி ஆயிடை-
வடக்கண் வேங்கடமும் தெற்கட் குமரியும் எல்லையாக உடைய

அவ்விடமாகிய, தமிழ் கூறு நல் உலகத்து - தமிழ் மொழியைக் கூறும் நல்ல உலகத்தின்கண், (வழக்கும்) வழக்கும் செய்யுளும் ஆயிரு முதலின் - வழக்கினையும் செய்யுளினையும் ஆராய்ந்த பெரிய காரணத்தானே, எழுத்தும் சொல்லும் பொருளும் நாடிச் செந்தமிழ் இயற்கை சிவணிய - அவற்றின்கண்ணவாகிய எழுத்திலக்கணமும் சொல்லிலக்கணமும் ஆராய்ந்து செந்தமிழின் உண்மையைப் பொருந்தி உணரும்பொருட்டு, நிலத்தொடு முந்து நூல் கண்டு - அச் செந்தமிழ் நிலத்து மொழியோடு முற்பட்டுத் தோன்றும் நூலினை நோக்கி, முறைப்பட எண்ணிப் புலம் தொகுத்தோன் - அந் நூலிற் கிடந்த இலக்கணம் பிற் காலத்தார் உணரும் முறைமைப்படக் கருதி நூலைத் தொகுத்துச் செய்தான், போக்கறு பனுவல் - அங்ஙனஞ் செய்த குற்ற மற்ற நூலினை, நிலந்தரு திருவிற் பாண்டியன் அவையத்து - மாற்ருரது நிலத்தைத் தனக்கு நல்கும் போர்த் திருவினையுடைய பாண்டியன் மாகீர்த்தி அவைக்களத்தின், அறம் கரை நாவின் நான்மறை முற்றிய அதங்கோட்டு ஆசாற்கு அரில்தபத் தெரிந்து- அறமே கூறும் நாவினகத்து நான் மறையும் முற்றப் பயின்ற அதங்கோடு என்னும் ஊரின் ஆசிரியனுக்குக் குற்றமறத் தெரி

௬

# தொல்காப்பியப் பாயிர விருத்தி

வித்து, மயங்கா மரபின் எழுத்துமுறை காட்டி - இயற்றமிழும் இசைத் தமிழும் நாடகத் தமிழும் முன்னூலுட் போல விரவாத தன்மையானே இயற்றமிழை வேறு பிரித்து முறையானே உலகிற்கு அறிவித்து, மல்கு நீர் வரைப்பின் ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியனெனத் தன் பெயர் தோற்றி - கடல் சூழ்ந்த நில

உலகத்தில் ஐந்திர வியாகரணம் உணர்ந்த தொல்காப்பியன் எனத் தன் பெயரைத் தோற்றுவித்தலால், பல்புகழ் நிறுத்த படிமையோன் - பல புகழையும் இவ் வுலகத்தின் நிலை பெறுத் தின தவ ஒழுக்கத்தினை உடையான் என்றவாறு.

“வேங்கடங் குமரி” எனவே திசை பெறப்படுமாயினும், எல்லை கூறப்புகுந்தார் ஆகலின், அதற்கேற்பத் திசைகூறி எல்லை கூறுதல் மரபு என்பதுபற்றி, ‘வடவேங்கடந் தென்குமரி’ என்றார்.

தமிழ் நாட்டிற்கு வடக்கட் பிற எல்லையும் உளவாக வேங்கடத்தை எல்லையாகக் கூறினார்; அகத்தியனார்க்குத் தமிழைச் செவியறிவுறுத்த செந்தமிழ்ப் பரமாசாரியனாகிய அறுமுகக் கடவுள் வரை என்னும்

இயைபுபற்றி என்பது. தெற்கட் குமரியாறாகலின், அதுவே எல்லையாயிற்று. கிழக்கு மேற்குக் கடல் எல்லையாகலின், வேறு எல்லை கூறாராயினார்.

"வடதிசை மருங்கின்
வடுகுவரம் பாகத்
 தென்றிசை யுள்ளிட்(டு)
எஞ்சிய மூன்றும்
 வரைமருள் புணரியொடு
பொருது கிடந்த
 நாட்டியல் வழக்க
நான்மையின் கடைக்கண்

யாப்பின திலக்கண
மறைகுவன் முறையே''

எனச் சிறுகாக்கை பாடினியார் தெற்கும் கடல் எல்லை கூறியது, குமரி யாறு கடல்கொண்ட பிற்காலத்துச் செய்தது என அறிக. 'வடவேங்கடம் தென்குமரி' என்பன அன்மொழித்தொகையாய் அவற்றை எல்லையாக உடைய நிலத்தை உணர்த்தின. இஃது

அறியாதார் 'ஆயிடை' என்புழித் தனித்து நின்று பொருளுணர்த்தல் ஆற்றாத அகரச் சுட்டினை ஆகுபெயர் என்றும்,

அவற்றுக்குள் என உருபு விரித்தும் இடர்ப்படுப.

'தமிழ் கூறு நல்லுலகத்து' என இடத்தின் நிகழ்பொருளின் தொழிலும், பண்பும் இடத்தின்மேல் நின்றன.

ஆயிடை ஆகிய உலகத்து

என்க. தொல்காப்பியப்

பாயிர விருத்தி

ரு

'இரு முதல் என்னும் பண்புத்தொகை ஒட்டி ஒருசொல் லாய் நின்று, பின்னர் ஆய் என்பதனோடு தொக்கு, வினைத் தொகையாயிற்று. கூர்த்த உணர்வு முதலிய பிற காரணங் களினும் இஃது இன்றியமையாச் சிறப்பிற்று என்பார் இருமுதல் என்றார். "நின்முகங் காணு மருந்தினேன்" என்புழிப்போல, 'ஆயிரு முதல்' என்புழி ஆராய்ச்சியை முதல் என்றதாகலின், ஆண்டு வினைகொண்டு முடிந்தது. ஆய்தல் - ஈண்டவ் விருவகை மொழிகளையும் கற்று உளங்கொளப் பயிறல்.

இங்ஙனம் வழக்கும் செய்யுளும் பயின்றார்க்கு, அவற்றின் கண் ஒருநிகரனவாய சொற்களுள் ஒன்றோடு ஒன்று ஒவ்வாதுள வாகிய செய்கை வேறுபாடுகளும் சொன்முடிபு பொருண்முடிபு வேறுபாடுகளும் நோக்கும்வழி, இவை எல்லாம் வழாநிலையோ? சில வழுவமைதியோ? வழுவோ? கட்டளையில்லையோ? எனவும் ஆசங்கை நிகழும் அன்றே? அவ்வாசங்கை நீங்க எழுத்து முதல் மூன்றும் ஆராய்ந்து செந்தமிழியற்கை சிவ ணுதற்கு, இந்நூல் ஒருதலையான் வேண்டப்படும் என்பதூஉம், அவை பயிலாதார்க்கு ஆசங்கையே நிகழாமையின் இந்நூல் பயன்படாது என்பதூஉம் விளக்கிய ஆயிரு முதலின் நாடிச் சிவணிய கண்டு எண்ணித் தொகுத்தான் என்றார். எனவே, வழக்கும் செய்யுளும் ஆராய்ந்த பின்னர் இந்நூல் கேட்கற் பாற்று என்பது பெறப்பட்டது. இக் கருத்து அறியாத நச்சி னார்க்கினியார் முதல் என்பதனைப் பெயரடியிற் பிறந்த முதனிலை வினைப்பெயராகக்கொண்டு, முதலுதலினால் என உரைப்பர். இருமுதல் என்னும் தொகைச்சொல் அங்ஙனம் பகுத்து இசைத் தல் பொருந்தாமை அறிக. இன்னும் அவர் நல்லாசிரியருடைய வழக்கும் செய்யுளும் என உரை கூறினர்.

"வழக்கெனப் படுவ(து) உயர்ந்தோர் மேற்றே
நிகழ்ச்சி யவர்கட் டாக லான"

என மரபியலுட் கூறுதலின், வழக்கு எனவே உயர்ந்தோர் வழக்கு என்பதூஉம், அதனோடு உடன் எண்ணப்படுதலிற் செய்யுளும் அவர் செய்யுள் என்பதூஉம், தாமே பெறப்படுதலின், அது மிகையாம் என மறுக்க. வழக்கு எனவே, செய்யுளும் அடங்கும் ஆயினும், தலைமை தோன்ற வேறு கூறினார்; 'முனிவர் வந்தார், அகத்தியனும் வந்தான்' என்புழிப்போல. உலக மொழியும் வேதமொழியும் எனப் பகுத்த மாபாடியத்திற்குக் கையடனாரும் இவ்வாறே உரைத்தார்.

சிா

# தொல்காப்பியப் பாயிர விருத்தி

**எழுத்திலக்கணமும், சொல்லிலக்கணமும் போலப் பொருள் இலக்கணமும் இன்றியமையாதது என்பது**

ஈண்டுப், 'பொருள்' என்றது, அகம் புறம் என்னும் இருகூற்றுப் பதிணுற்றிணைப் பகுதியவாய்ச் செய்யுளிற் பாடுதற்கு உரிய இன்ப முதலிய உலகியற்பொருளை, மொழித்திறம் உணர்தற் பொருட்டுச் செய்யுள் ஆராய்ச்சிக்கு ஒருதலையான் வேண்டப்படு

# தல்பற்றி இயற்றமிழ்

# மொழியாகக்கொண்டு

ஓதற்பாலன அவை

யேயாகலின். அற்றேல், இஃது எழுத்தும் சொல்லும்போலச் செந்தமிழ் இயற்கை சிவணுதற்கு ஏதுவாகாமையானும், வடமொழியார் வேறு ஓதுவதல்லது சத்தநூலுள் ஓதாமையானும் ஈண்டு ஓதல் வேண்டா பிறவெனின், ஈண்டுக் கூறும் பொருட்பாகுபாடுகள், பொது ஆகாது தமிழிற்கே சிறந்து வேறொன்றாற் பெறப்படாமையின், இப்பொருள்பற்றி வரும் பரிபாடல், கலி, அகநானூறு, புறநானூறு, ஐங்குறுநூறு, நற்றிணை, குறுந்தொகை, ஆற்றுப்படை, பதிற்றுப்பத்து முதலிய செய்யுள் ஆராயப் புகுந்தார்க்கு இப் பொருட்பாகுபாடு உணராக்காற் குன்றுமுட்டிய குரீஇப் போல இடர்ப்பட்டுச் செய்யுண்மொழித்திறம் உணரமாட்டாமையிற், செய்யுண் மொழித்திறம் உணர்ந்து செந்தமிழ் இயற்கை சிவணுதற்கு ஒருதலையான் ஓதல் வேண்டும் என்க.

செந்தமிழ் இயற்கை சிவணுதல், மொழித்திறன் முட்டறுத்தல். முட்டு - வழு.

'நாடிச் சிவணிய' என்பது 'ஓதி யுணர்ந்தான்' என்பது போலக் காரணகாரியப் பொருட்டாய் நின்றது. 'சிவணிய' என்பது செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம். இஃது உணரமாட்டாதார், நாடிக் கண்டு எண்ணித் தொகுத்தான் எனக் கூட்டி, ஒரு வினைமுதல் வினையாக்கி, நாடிய ஆராய்ச்சியிற் குறைபாடு உடையவற்றிற்கு 'முந்துநூல் கண்டு' என்றும், 'ஆயிரு முதலிற் செந்தமிழ் இயற்கை சிவணிய' எனக் கொண்டு கூட்டியும் இடர்ப்படுப.

‘செந்தமிழ்’ என்பதனை ‘நிலம்’ என்பதனோடுங் கூட்டுக. நிலம் என்பது ஆகுபெயர்.



யொடும் கெடும் என்றது, அகரச் சாரியை எனக் கோடலும், அ, ஆ, வ - என மூன்றும் பலவறி சொல்[1] என்றது, உண்குவ

உறங்குவ என்புழி வகரத்தை வேறு பிரித்து, இடைநிலை எனக் கொண்டு, அகரவிகுதி[2] என்றொழிதலும், அகம் புறம் எனப் பகுத்தவற்றைத் தம்முள் வேறுபாடு நோக்கி அகம் அகப்புறம் புறம் புறப்புறம் என நான்காகப் பகுத்தலும், வெட்சித்திணை உழிஞைத்திணைகளின் மறுதலை வினையை வீற்று வினையாதலும் வேற்றுப்பூச் சூடுதலும் ஆகிய வேறுபாடு பற்றி வேறுதிணையாக

வைத்து எண்ணுதலும், இன்னோர் அன்னவை பிறவும் ஆம்.

இவை இங்ஙனம் வேறுபடினும், புணர்ச்சிமுடிபுஞ் சொன் முடிபும் பொருண்முடிபும் வேறுபடாமையின், மரபுநிலை திரியா வாயின. இவ்வுண்மை உணராதார் பன்னிரு படலம் முதலிய நூல்களை வழீஇயின என்றிகழ்ந்து, பன்னிரு படலத்துள் வெட்சிப்படலம் தொல்காப்பியனார் கூறியது அன்று எனவும், தொல்லாசிரியர் வழக்கொடு முரணித் தமக்கு வேண்டியவாறே கூறுப.

இனிச்,

"சார்ந்துவரன்
மரபின் மூன்றலங்
கடையே"

(தொல். நூன். க)

எனவும்,

"சார்ந்துவரின் அல்லது
தமக்கியல் பிலவெனத்
தேர்ந்து வெளிப்படுத்த
ஏனை மூன்றும்"

(தொல். பிறப். க௯)

எனவும் வரையறுத்து ஓதியவாறே சார்பெழுத்து மூன்று என்றது சில உயிரெழுத்துக்களையும் மெய்யெழுத்துக்களையும்,[3] உடன்சேர்த்து எண்ணுதலும், தன்மைச்சொல்லை[4] உயர்திணை என்றது, விரவுத்திணை[5] எனச் சாதித்தலும், “நடுவணைந் திணை”[6] என்னுஞ் சூத்திர விதியோடு மாறுகொளப்

பாலைக்கு

1. தொல். வினையியல் சூ. 19.

2. நன். வினையியல் சூ. 10.

3 நன். எழுத்தியல் சூ. 5.

4. தொல். வினையியல சூ. 11 (பெயரியலையும் நோக்குக.)

5. நன். வினையியல் சூ. 11 (பெயரியலையும் நோக்குக.)

6. தொல். அகத்திணையியல் சூ. 2.

௧௨

# தொல்காப்பியப் பாயிர விருத்தி

நிலம் பகுத்துக் கோடலும், இன்னும் இவை போல்வனவும் மரபு நிலை திரிதலின், வழிநூல் சார்புநூல் ஆதற்கு ஏலாவாய் இழுக்குப்படும் என்பது.

மரபுநிலை திரிதல் ஆகாது என்பது

அற்றேல், ஒன்றன்வழியே அன்றியும் தாந்தாம் அறிந்த வாற்றானே நூல் செய்யப்பெறாரோ? எனின்; அது மரபு அன்று என்பது நோக்கியன்றே ஆசிரியர்,

"மரபுநிலை திரியிற் பிறிதுபிறி தாகும்"

(தொல். மரபு. ௯௦)

என்னுஞ் சூத்திரவிதி நூலிற்கும் எய்துவித்து, நூலின் மரபு கூறப்புகுந்தார் என்க. காலந்தோறும் வழக்கு வேறுபடுதலின், அதுபற்றிச் செய்யும் நூலும் வேறுபட அமையும் பிற எனின், முற்காலத்து வழக்கு வீழ்ந்ததனை வழு என்று களையப்படுமாயி னன்றே பிற்காலத்து வேறுபட்டப் பிறந்த வழக்கு இலக்கணம் எனத் தழுவிக்கொள்வது. தொல்லாசிரியர் வழக்கே வழக்கு; பிற்காலத்து வேறுபட வழங்கப்படுமாயின், அவ்வழக்கு இலக் கணத்தோடு பொருந்தாது என விலக்குதற்கன்றே,

"வழக்கெனப் படுவ(து) உயர்ந்தோர் மேற்றே நிகழ்ச்சி யவர்கட் டாக லான" (தொல். மரபு.

கூஉ)

என்றார் ஆகலின், அமையாது என்க. புதியன புணர்த்தல் பழையவற்றோடு முரணாத வழியே என உணர்க.

"வழியி னெறியே நால்வகைத் தாகும்"

(தொல். மரபு. கூகூ)

"தொகுத்தல் விரித்தல் தொகைவிரி மொழிபெயர்(து)
அதர்ப்பட யாத்தலோ டனைமர பினவே,"

(தொல். மரபு கூஎ)

என்னும் மரபியற் சூத்திரங்களான் வழிநூல் நான்கு வகையுள் ஒன்றானியாக்கப்படும் ஆகலின், அவற்றுள், இது தொகுத்தி யாத்தான் என்பார் புலந் தொகுத்தோன் என்றார்.

நூல்

புலம் - நூல். அஃதாவது ஒருபொருள் நுதலிய சூத்திரமும், இனமொழி கிளந்த ஓத்தும், பொதுமொழி கிளந்த படல

தொல்காப்பியப் பாயிர

மும் என்னும் மூன்று உறுப்படக்கிய பிண்டம். அவற்றுள், சூத்திரம் என்னும் ஓர் உறுப்பே அடக்கிய பிண்டம் இறையனுர் களவியல். சூத்திரமும் ஒத்தும் என்னும் இரண்டு உறுப்படக்கிய பிண்டம், பன்னிருபடலம். மூன்று உறுப்படக்கிய பிண்டம், தொல்காப்பியம். இவை முறையே சிறுநூல், இடைநூல், பெருநூல் எனப்படும். இனி அகத்தியம் இயற்றமிழ், இசைத் தமிழ், நாடகத்தமிழ் என்னும் மூன்று உறுப்பினையும் அடக்கி நிற்றலின், அது பிண்டத்தினை அடக்கிய வேறோர் பிண்டம் என்றார் நச்சினார்க்கினியர்.

போக்காவன, கூறியது கூறல் முதலியன. 'போக்கறு பனுவல்' எனவே, அவற்றை எதிர்மறுத்து உணரப்படுங் குணங்களும், முப்பத்திருவகை உத்தியும் உடைய பனுவல் என்பதூஉம் பெறுதும். உத்தியை வடநூலார் பரிபாடை என்ப.

> "நற்பூங் கழலா னிருதிங்க ணயந்த வாறுங்
> கற்பா டழித்த கனமாமணித் தூண்செய் தோளான்
> வெற்பூ டறுத்து விரைவின் னெறிக்கொண்ட வாறும்"

என்புழிப் போலப் போக்கறு பனுவல் என்றது சுட்டுப்பொருட் டாய் நின்றது.

ஒருவராற் செய்யப்பட்ட நூல் ஒரு வேந்தன் அவைக்களத்தில் ஒரு புலவனுக்கு ஏற்பித்து அரங்கேறின், அது சிறக்குமாகலின், பாண்டியன் அவையின் அதங்கோட்டாசாற்கு அரில்தபத் தெரிவித்தார் என்பது. இக் கருத்தே பற்றி ஒருசாரார் ஆக்கியோன் பெயர் முதலிய எட்டனோடு களமும், அக் களத்தில் அரங்கேறிய காலமும் கூட்டி எண்ணி, நூல் செய்தற்கு ஏது இஃது என்னுங் காரணமும் உடன் சேர்த்துப் பதினொருவகைத்துச் சிறப்புப்பாயிரம் என்றார் என உணர்க. ஆயின், இந் நூல் யாது காரணத்தாற் செய்யப்பட்டதோ எனின், சின்னாட் பல்பிணிச் சிற்றறிவினோர் அறியும் முறைமைப்பட எண்ணி எனவே, மாணாக்கர்மாட்டு இரக்கங் காரணமாகச் செய்யப்பட்டது என்க.

# பிறவினை விகுதி தொக்கு நிற்றலும் எச்சத் திரிபும்

'எனப்படுவான்' எனற்பாலது, 'இல்வாழ்வான் என்பான்'[1] என்புழிப் படு விகுதி தொக்கு நின்றாற்போலத் தெரிவித்து என

1 திருக்குறள் இல்வாழ்க்கை செ. 1,

# தொல்காப்பியப் பாயிர விருத்தி

நிற்கற்பாலது 'தெரிந்து' என விவ் விகுதி தொக்கு நின்றது. இங்ஙனம் வருவனவற்றை வடநூலார் அந்தர்ப்பாவிதணிச்சென்பர்.

"குடிமடிந்து குற்றம் பெருகும்" (குறள், ௬0௪) "குடிபொன்றிக் குற்றமும் ஆங்கே தரும்" (குறள், ௧௭௧) "உரற்கால் யானை ஒடித்துண் டெஞ்சிய யா"

"கோழி கூவிப் போது புலர்ந்தது" (குறுந். ௨௩௨)

என்பனவும் அப்பொருளவாய் நின்றன. அரசன் எடுத்த ஆலயம் எனபதும அது.

இஃது உணராத பரிமேலழகியார் "இருணீங்கி யின்பம் பயக்கும்"[1] என்புழி நீக்கி என்பது தொடை நோக்கி மெலிந்து நின்றது எனவும், நீங்க என்பதன் திரிபு எனினும் அமையும் எனவும் உரைத்து இடர்ப்படுவர். உரையாசிரியரும், பரிமேலழகியாரும்,

"முதனிலை மூன்றும் வினைமுதன் முடிபின" (தொல். வினை. ௩௩)

என்னுஞ் சூத்திரத்தோடு முரணுதலை யஞ்சிச், செய்து என்னும் வாய்பாட்டான் நின்று, பிறவினை முதல்வினை கொண்டன எல்லாம் செய என் எச்சத் திரிபு என்றே கொள்வர். அதனை மறுத்து நிகழ்காலத்துக்கு உரிய செய என் எச்சம் காரணப் பொருண்மை உணர்த்தும் வழியல்லது இறந்தகாலம் உணர்த்தாமையிற் காரணகாரியப் பொருட்டாய்ப் பிறவினை முதல்வினை கொண்டு முடிந்த வழியே செய்து என் எச்சம் செய என் எச்சத் திரிபெனப்படும் எனக்கொண்ட சேனாவரையர், "ஒடித்துண் டெஞ்சிய யா" என்புழி எஞ்சுவித்த எனப் பொருள் கொள்ள அறியாது, செய்து என் எச்சம் பிறவினை முதல்வினை கொண்டு முடிந்தது எனக் கருதி, இன்னோரன்னவற்றை,

"வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய"

(தொல். எச். சுக)

என்னுஞ் சூத்திரத்தால் அமைத்தார். நச்சினார்க்கினியார் "அம்முக்கிளவி" என்னுஞ் சூத்திரத்தை இடர்ப்படுத்தி, நவிந்து

1. நிருக்குறள் மெய்யுணர்தல் செ. 2.



பொருள் கொண்டு, செய்து என் எச்சம் தன்வினை முதல்வினை கொண்டு முடிவனவும் உள; பிறவினை முதல்வினை கொண்டு முடிவனவும் உள எனத் தமக்கு வேண்டியவாறே கூறினர்.

அது,

"முதனிலை மூன்றும்
வினைமுதன் முடிபின"
(தொல்.
வினை. ௩௪)

"அம்முக் கிளவியுஞ்
சினைவினை தோன்றின்"

"வினை எச்சம்"
(தொல். வினை. ௩௫)
என்பனவற்றைப் பயனில்

கூற்றாகச் செய்யுமாறு அறிக.

“கரும்பார் தோண்முத்தங்
கழன்று செவ்வாய்
விளர்த்துக்
கண்பசலை பூத்த் காமம்
விரும்பார் முலைக்கண்
கரிந்து திங்கள்
வெண்கதிர்கள்
பெய்திருந்த
பொற்செப் பேபோல்
அரும்பால் பரந்த நுசுப்புங்
கண்ணின் புலனாயிற்
றுய்ந்த வணிச்ச மாலை
பெரும்பா ரமாய்ப்பெரிது
லைந்து நற்சூற் சலஞ்சலம்போ
லங்கைந லந்தொ

லைந்ததே''

என்புழிக் காரண காரியப் பொருண்மை உணர்த்தாது பிறவினை கொண்டனவால் எனின்; செய என் எச்சம் தனக்குரிய நிகழ் காலம் உணர்த்தும்வழிக் காரண காரியப் பொருள்பட வர வேண்டாமையின், இச் செய்யுளின் வரும் வினையெச்சம் எல் லாம் நிகழ்காலமே குறித்து வருதலின், அவை செய என்பதன் திரிபே யாம் என்பது. 'இவனு மிவளுஞ் சிற்றில் இழைத்துஞ் சிறுபறை அறைந்தும் விளையாடுப' என்பது பொதுவினை ஆயி னும், வினைமுதல்வினை ஆதலும் உடைமையின், அவை, வினை முதல் வினை கொண்டனவே ஆம்; "வினைமுதன் முடிபின''[1] என்புழிப் பொது ஆகாது, வினைமுதற்கே வினையாதல் வேண்டும் என்னும் வரையறை இன்றி, வினைமுதல் வினை என்னுந் துணை யேயாய் நிற்றலின். இது சேனாவரையர் உரையான் உணர்க.

"தானுந் தேரும் பாகனும் வந்தென் னலனுண்டான்'' என்புழி உண்டான் என்பது சிறப்புவினையாயினும், வந்து என் பது வினைமுதல்வினை கொண்டு முடிந்ததேயாம்; "வினைமுதன் முடிபின'' என்ற துணையல்லது வினைமுதற்கு எல்லாம் வினை

1. தொல். வினை இயல் சூ. 33.

கசு

# தொல்காப்பியப் பாயிர விருத்தி

யாதல் வேண்டும் என்னும் யாப்புறவு இன்மையின். இன்னும் வேறுபட வரும் வினையெச்சம் எல்லாம் இவ்வாறு ஓர்ந்து முடியும் இயல்பு அறிந்து முடித்துக்கொள்க; செய்தென் எச்சம் யாண்டுந் தன்வினை முதல்வினை கொண்டே முடியும் என்பது தொல்லாசிரியர் துணிபு ஆகலின்.

'மயங்கா மரபின் எழுத்துமுறை காட்டி' என்புழி எழுத்து

என்றது இயற்றமிழை.

அஃது,

"எண்ணென்ப ஏனை

எழுத்தென்ப இவ்விரண்டுங்

கண்ணென்ப வாழு முயிர்க்கு,"

"எழுத்தறியத் தீரு மிழிதகைமை"

என்பவற்றானு முணர்க. எழுத்து, இயற்றமிழ், சத்தநூல் என்பன ஒருபொருட்கிளவி. அகத்தியத்துள் முத்தமிழும் விரவிக் கூறப்பட்டன. அவற்றுள், இயற்றமிழை வேறு பிரித்து வழிப் படுத்தார் தொல்காப்பியர் முதலாயினார்; இசைத்தமிழை வேறு பிரித்து வழிப்படுத்தார் பெருநாரை, பெருங்குருகு முதலிய நூலுடையார்; நாடகத் தமிழை வேறுபிரித்து வழிப்படுத்தார் முறுவல், சயந்தம், குணநூல், செயிற்றியம் முதலிய நூலுடையார் என உணர்க. இயற்றமிழுள்ளும், எழுத்து, சொல், பொருள் மூன்றினையும் முன்னூலுட்போல விரவக் கூறாது, முன்னர் எழுத்து உணர்த்திப், பின்னர்ச் சொல் உணர்த்தி, அதன் பின்னர்ப் பொருள் உணர்த்தினான் என்பார், 'காட்டி' என்றொழியாது 'முறை காட்டி' என்றார்.

# பொருள் இலக்கணமும் நாடக இலக்கணமும்

அற்றேல்,

பொருளதிகாரத்துக்

கூறும் பொருளாவது,

பெரும்பாலுங் காமச்சுவையும் வீரச்சுவையும் பற்றி யோனி என்னும் உறுப்புத் தழுவி நாடக வழக்கோடு ஒத்து வரும் புலநெறி வழக்காகலின், அது நாடகத் தமிழுள் ஓதற்பாலது அல்லது, இயற்றமிழோடு இயைபின்மையின், ஆசிரியர், நாடகத்

தமிழும் உடன் ஓதினர் என்னுமோ ? எனின், என்னும். என்னே? இது நாடகத் தமிழுள் ஓதற்பாலதாயினும் கலித்தொகை முதலிய செய்யுள் ஆராய்ச்சிக்கு இன்றியமையாது வேண்டப்படு

தலின், அதுபற்றி இயற்றமிழ் மொழியின் ஒழிபாய்க் கொண்டு ஈண்டைக்கு வேண்டும் துணையே ஓதினர் அல்லது, நாடகத் தமிழின் ஓதப்படும் கூத்து விகற்பமும், அவினய விகற்பமும்,

# தொல்காப்பியப் பாயிர விருத்தி கள

தோரிய மகளிர்[1] முதலிய கூத்தியர் இலக்கணமும், தலைக்கோலியல்பும்[2] ஆடலாசிரியர் முதலியோர் இலக்கணமும், ஆடரங்கின் இலக்கணமும் ஆகிய இன்னோரன்னவற்றை ஓதாமையின்.

அற்றேல் அஃது ஆக,

"எண்ணென்ப ஏனை எழுத்தென்ப"

எனவும்,

(திருக்குறள், கல்வி. உ)

"சத்தமுஞ் சோதிடமும்"

(நாலடி. துறவு. உ)

எனவும், இயற்றமிழோடு சிறந்து எடுத்து எண்ணப்படுஞ் சோதிட முதலிய பிற கலைகளும் உளவாக, முத்தமிழ் எனத் தமிழாசிரியர் எல்லாம் இவற்றையே விதந்து கொண்டது என்னையோ? எனின், அஃது ஒக்கும். சோதிட முதலிய பிற கலைகளெல்லாம் ஆரியத்தினும் தமிழினும் ஏனை மொழிகளினும், வேறுபாடு இன்றி ஒப்ப நிகழ்தலின், அவற்றை வேறு விதிக்க வேண்டாமையானும், இயல் இசை நாடகம் என்னும் மூன்றும் தமிழ் நிலத்துச் சில வேறுபாடு உடைமையின், அவற்றை வேறு விதிக்க வேண்டுதலானும், அதுபற்றி அகத்தியத்துள் இம் மூன்றுமே எடுத்தோதினர் ஆகலின், முத்தமிழ் என வழங்கப்பட்டன என அறிக.

தமிழ் வழங்கு நிலமே அன்றி நிலவுலகமுழுதும் தன் பெயர் தோற்றுவித்தான் என்பது விளக்கிய, 'மல்குநீர் வரைப்பு' என்றார்.

பாணினீய முதலிய வியாகரணங்களும் உளவாக 'ஐந்திர நிறைந்த தொல்காப்பியன்' என்றார்,

"பெயரது விகாரமென்
றோதிய புலவனு முளன்"
எனப் பிறர் மதங்கூறி,

"இந்திர
னெட்டாம் வேற்றுமை
யென்றனன்"

என இந்திரனோதியதனைத் தம் துணிபாகக்கொண்ட அகத்தியனார்க்கு ஐந்திரமே உடன்பாடு என்பது பெறப்படுதலின், அதுவே

1. தோரிய மகளிர்—ஆடல் மகளிர்களில் ஆடி முதிர்ந்தவர்.
2. தலைக்கோல் - கணிகையர் பெறும் சிறந்த பட்டம்.

தொல்காப்பியனார்க்கும் உடன்பாடு என்பதுபற்றிப்போலும் என்க. எனவே, தொல்காப்பியனார்க்கு வடநூல் அறிவுறுத்த ஆசிரியரும் அகத்தியனார் என்பது பெற்றாம்.

பல்புகழ் ஆவன முறைப்பட எண்ணித் தொகுத்தலானும், பாண்டியன் அவையத்து அதங்கோட்டு ஆசாற்குத் தெரிவித்தலானும், ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன் எனத் தன் பெயர் தோற்றுவித்தலானும், உடம்பொடு புணர்த்துக்கூறிய படிமை யானும் வருவன. 'தோற்றி நிறுத்த' என்பது காரண காரியப்பொருட்டாய் நின்றது. 'தொகுத்தோன் படிமையோன்' எனக் கூட்டுக. ஏகாரம் இரண்டும் ஈற்றசை.

# சிறப்புப் பாயிரத்தில் வருதற்கு உரிய ஆக்கியோன் பெயர் முதலிய பதினொன்று

'தொல்காப்பியன்' எனவே ஆக்கியோன் பெயரும், அதனாற் பெறப்பட்ட நூற்பெயரும் 'முந்து நூல் கண்டு' எனவே வழியும், 'வடவேங்கடந் தென்குமரி' எனவே எல்லையும், 'வழக்குஞ் செய்யுளும் ஆயிரு முதலின்' எனவே இவை ஆய்ந்தபின்னர்

இது கேட்கற்பாற்று என்னும் யாப்பும், இவை ஆய்ந்தோர் இது கேட்டற்கு உரியர் என்னும் கேட்போரும், 'எழுத்து முறை காட்டி' எனவே நுதலிய பொருளும், 'செந்தமிழ் இயற்கை சிவணிய' எனவே பயனும் ஆகிய எட்டும் பெறப்பட்டன. ஏனைக்

**காலமும் களனும் காரணமும் முன்னர்க் காட்டப்பட்டன.**

காலம் முதலிய மூன்றும் நூல் செய்தார் காலத்து நிகழ்ந்தன. ஆக்கியோன் பெயர் முதலிய எட்டும் நூல் செய்தார் காலத்தும், நூல் வழங்கும் காலத்தும் ஒப்ப நிகழ்வன. இவை தம்முள் வேற்றுமை. கழிந்தவற்றை உணர்தலாற் பெரும்பயன் இன்மையின், அவை ஒரு சாராராற் கொள்ளப்பட்டன. ஆக்கியோன் பெயர் முதலியன ஒருதலையான் உணர வேண்டுதலின், அவை எல்லா ஆசிரியராலும் கொள்ளப்பட்டன.

இவ்வெட்டனுள்ளும் ஆக்கியோன் பெயர் முதலிய நான்கும் ஐயம் அறுத்தற்பொருட்டன்றி ஒருதலையான் உணரவேண்டாமையானும்,



“சிதைவில வென்ப முதல்வன் கண்ணே”

என்பது ஒத்தாகலின், முதல் நூற்கண் ஐயம் இன்மையின் ஐயம் அறுத்தல் வழிநூன் மாத்திரைக்கே வேண்டுதலானும், அவற்றுள்ளும் வழி என்பது முதல் நூற்கு இன்மையானும், ஆக்கியோன் பெயரும், நூற்பெயரும் பாயிரத்தானே அன்றி நூல் முதல் இடை கடையின் எழுதப்படுதலானும், உலகத்திற் றோற்றத்தானும் அறியவும் படும் ஆகலானும், எல்லை நாட்டு எல்லையே நூற்கு எல்லையாக உணரப்படும் ஆகலானும், யாப்பு முதலிய போல இன்றியமையாச் சிறப்பின அன்மையின், அந்நான்கினையும் முன்னர் வைத்து, இன்றியமையாச் சிறப்பின ஆகிய யாப்பு முதலிய நான்கினையும் இறுதிக்கண் வைத்து,

“ஆக்கியோன் பெயரே வழியே யெல்லை
நூற்பெயர் யாப்பே நுதலிய பொருளே

கேட்போர்
பயனே டாயெண் பொருளும்
வாய்ப்பக் காட்டல்
பாயிரத் தியல்பே''

எனச் சூத்திரஞ் செய்தவாறு. இக்கருத்தே பற்றி வடநூலாரும் யாப்பு முதலிய நான்கும் உணர்த்துவதே பாயிரம் எனக் கோள்ப, இவற்றுள்ளும் பயன் இன்றியமையாது சிறந்தமை யின், இறுதிக்கண் வைக்கப்பட்டது. ஏனையவும் இவ்வாறே ஓர்ந்து உணர்க.

வடநூலார் யாப்பை ஆனந்தரியம் என்றும், நுதலிய பொருளை விடயம் என்றும், கேட்போரை அதிகாரிகள் என் றும், பயனைப் பிரயோசனம் என்றுங் கூறுப.

அவருள் ஒரு சாரார், ஆனந்தரியப்பொருள், நூலைப் பயப் பித்தற்குக் காரணமாய்க் கேட்போரை விசேடித்து நிற்றலின், வேறு கூறவேண்டா என்னும் கருத்தால், ஆனந்தரியம் நீக்கிச் சம்பந்தம் ஒன்று கூட்டி நான்கு என்பாராயினர். சம்பந்தம் என்பதூஉம் யாப்பு என்னும் பொதுச்

சொல்லாற் கொள்ளப் படும். அது 'புலந் தொகுத்தோன்' எனவே, நூற்கும் நூல் நுதலிய பொருட்கும் தொகுப்பதூஉம் தொகுக்கப்படுவதூஉம் ஆகிய சம்பந்தம் என்பது பெறப்பட்டது. தொடர்ச்சி என்பன ஒருபொருட் கிளவி.

யாப்பு, இயைபு,

ஈண்டுக் கேட்டல்

பாடங் கேட்டல். அது,

"கேள்வி விமரிசம் பாவனை" என்பதனானும்,

"கேட்டவை நினைத்தலும் பாடம் போற்றலும்," "ஒருகுறி கேட்போன் இருகாற் கேட்பின்" என்பவற்றானும் உணர்க.

இவ்வெட்டும் உணர்ந்ததற்குப் பயன் நூல் பயிலுதற்கண் ஊக்கம் உண்டாதல். ஊக்கம் - உள்ளக் கிளர்ச்சி.

# ஆக்கியோன் பெயர் முதலியவற்றின் இனம்

இனி, "வாய்ப்பக் காட்டல்'' என்பதனானே இத்துணைச் சிறப்பிலவாய் அவ்வவற்றிற்கு இனமாய்க் காட்டப்படுவனவும் உள என்பது பெற்றாம். அவை ஆக்கியோன் பெயரே அன்றி ஆக்குவித்தோன் பெயர் கூறுதலும், வழியே அன்றி அதன் வகை ஆகிய தொகுத்தல் முதலிய நான்கினுள் ஒன்று ஆமாறு கூறுதலும், தன் முதல் நூற்கு வழி கூறுதலும், அது வந்த மரபுவழி கூறுதலும், பொது எல்லை கூறுதலே அன்றிச் செந்தமிழ் முதலியவற்றின் சிறப்பு எல்லை கூறுதலும், நூற்பெயரே அன்றிப் படலப் பெயர் ஓத்தின் பெயர் கூறுதலும், நூற்கு இயைபு கூறுதலேயன்றி நூலினுட் படலம் முதலியவற்றிற்கு

**இயைபு கூறுதலும், சம்பந்தம் காட்டுவார் மதத்தில் நூற்கும் நூல் நுதலிய பொருட்கும் கிழமை கூறுதலே அன்றி நூல்**

நுதலிய பொருட்கும் பயனுக்கும் கிழமை கூறுதலும், நூற்கும் நூல் செய்தோனுக்கும் கிழமை கூறுதலும், நூல் நுதலிய

பொருளே அன்றிப் படலம் நுதலியதூஉம் ஒத்து நுதலியதூஉம் சூத்திரம் நுதலியதூஉம் கூறுதலும், கேட்போரே அன்றிக் கேட்பிப்போரைக் கூறுதலும், பயனே அன்றிப் பயனுக்குப் பயன் கூறுதலும் ஆம்.

பயனுக்குப் பயனாவது :

"எழுத்தறியத் தீரு
மிழிதகைமை தீர்ந்தான்
 மொழித்திறத்தின்
முட்டறுப்பா

ஞசு—மொழித்திறத்தின்

முட்டறுத்த நல்லோன் முதனூற் பொருளுணர்ந்து
கட்டறுத்து வீடு பெறும்''

என்பதனுற் காண்க. எனவே, முதல்நூற்பொருள் உணர்தற்கு முறையானே இது கருவி நூல் என்பது பெறப்பட்டது. முதல் நூல் - வீட்டு நூல்.

ஈண்டுக் கேட்பிப்போர் இயற்றமிழ் வல்ல ஆசிரியர். படலம் நுதலியது இவ்வதிகாரம் என்னுதலிற்றோ? எனின் என்பது..

# தொல்காப்பியப் பாயிர

# விருத்தி உக

'எழுத்துஞ் சொல்லும் பொருளு நாடி' என்பதூஉம் அதனை விளக்கி நின்றது. ஒத்து நுதலியது, இவ்வோத்து என்னுதலிற்றோ? எனின் என்பது. சூத்திரம் நுதலியது இச்சூத்திரம் என்னுதலிற்றோ? எனின் என்பது. படலத்திற்கு இயைபு மேலை அதிகாரத்தினோடு இயைபு

உடைத்தாயிற்று என்பது.
ஒத்திற்கு இயைபு மேலை ஒத்தினோடு இயைபு உடைத்தாயிற்று என்பது. சூத்திரத்திற்கு இயைபு மேலைச் சூத்திரத்தோடு இயைபு உடைத்

தாயிற்று என்பது. இவை நூன்முகத்துக் காட்டப்படுதலே அன்றிப் படலமுகத்தும் ஒத்து முகத்தும் சூத்திர முகத்தும் காட்டவும் படும். இவை எல்லாம் பாயிரமேயாம். பிறவும் இவ்வாறே கண்டுகொள்க.

அற்றேல், கேட்போர் மாணாக்கரும் கேட்பிப்போர் ஆசிரியரும் ஆதலான் இவ்விரண்டும்

பொதுப்பாயிரத்தாற் பெறப்படு மால் எனின், அற்றன்று; பொதுவகையான் ஆசிரியர்க்கும் மாணுக்கர்க்கும் இலக்கணம் பெறப்பட்டது அல்லது இந்நூற்கு இன்னுர் என்னும் சிறப்பு வகை ஆண்டுப் பெறப்படாமையின், இஃது ஈண்டுக் காட்டப்படும். இது காட்டாக்கால், சிற்றறிவோர் பெருநூலும், பேரறிவோர் சிறுநூலும், முத்தமிழுள் ஒரு நூற்கு உரியோர் ஏனை இரண்டு நூலும், அறம் பொருள், இன்பம் வீடு என்னும்

நான்கனுள் ஒன்றற்கு உரியார் எனை மூன்று நூலும் கேட்பான்புக்கு இடர்ப்பட்டு மயங்குப ஆகலின், இஃது ஒருதலையாற் காட்டல் வேண்டும் என்பது. இதுபற்றி அன்றே பொது எனவும் சிறப்பு எனவும் பாயிரம் இரு பகுதிப்பட்டதூஉம் என்க.

இக்கருத்து அறியாத உரையாசிரியரை உள்ளிட்டோர் எல்லாரும் நூல் அரங்கேறும் அவைக்களத்துக்

கேட்டாரைக்
கேட்போர் என்றும், தொகுத்தல் முதலிய வழியின் வகையினை யாப்பு என்றும் கூறினர். 'ஆக்கியோன் பெயர்' 'முதலிய பொருள்' என்பனபோல இறந்தகாலத்தாற் கூறாது கேட்போர் என எதிர்காலத்தாற் கூறியதே அஃது உரையன்மைக்குச் சான்று ஆகலானும், காலம் களத்துள் அடங்குதலின், வேறு கூறவேண்டாமையானும், ஆக்கியோன் பெயர் முதலியனபோல நூல் வழங்குங்காலத்து நிகழ்வது அன்றாகலின், அவற்றோடு ஒருங்குவைத்து எண்ணல் பொருந்தாமையானும், கேட்டற்கு உரிய அதிகாரிகளாவாரை ஒருதலையாக உணர்த்தல் வேண்டும் ஆகலானும், தொகுத்தல் முதலியன வழியுள் அடங்குதலானும், இயையும் ஒருதலையான் உணர்த்தற்பாலது ஆகலானும், யாம்

கூறியதே வடநூலார்க்கும்
உடன்பாடாகலானும்,
அவருரை போலியுரை என்க.

இனி, மாபாடியத்துள், பாதுகாப்பு, ஓர்ச்சி, கருவி, எண்மை, ஐயமறுத்தல் என்பனவும் பயன் என்பர். அவை எல்லாம் மொழித்திறத்தின் முட்டறுத்தற் பயத்தவாய் அடங்கும். அவற்றை ஈண்டு உரைக்கிற் பெருகும்.

இப்பாயிரத்தை வடநூலார் உபோற்காதம் என்ப.

இனி, என்பது பாயிரம் என்னுதலிற்றோ? எனின் என்பதூஉம், ஆக்கியோன் பெயர் முதலிய எட்டும் உணர்த்துதல் நுதலிற்று என்பதூஉம், பாயிரம் கேட்டலாற் பெறப்படும் பயன் இது என்பதூஉம், இப்பாயிரம் செய்தார் இவர் என்பதூஉம் போல்வன பாயிரத்துக்குப் பாயிரம் எனக் கொள்க. இவையெல்லாம்

"ஒத்த சூத்திர
முரைப்பின்"
(தொல். மரபி. கூ௮)
என்புழி ஒத்த என்பதனாற்

கொள்ளப்படும்.

தொல்காப்பியம் உடையான் என்னும் பொருட்கண் அம் முக் கெட்டு, அன் விகுதி புணர்ந்து, தொல்காப்பியன் என நின்று, பின்னர்த் தொல்காப்பியனாற் செய்யப்பட்ட நூல் என்னும் பொருட்கண் அன் விகுதி கெட்டு, அம் விகுதி புணர்ந்து,

தொல்காப்பியம் என முடிந்தது. "முதலிற் கூறும்" (தொல். சொல். வேற்றுமைமயங்கியல், ௩௧) என்னும் சூத்திரத்துள் சேனாவரையரும் இவ்வாறே கூறி, உரையாசிரியரை மறுத்தார்.

இனி, உரையாசிரியரும் நச்சினார்க்கினியரும் இதனை ஆகுபெயர் என்றும், ஈறு திரியும் என்றும் கூறினாரால் எனின், அவர் ஆகுபெயர்ப்பெற்றி அறிந்திலர் போலும் என்க. ஆகுபெயர்கள் எல்லாம் நின்றாங்குநின்று இயற்பெயர்ப்பொருளையும் வேறுணர்த்தி நிற்கும் ஆற்றலுடைய ஆதலும், அகத்தியம் தொல்காப்பியம் கபிலம் என்பவற்றிற்கு அவ்வாற்றல் இன்மையும் ஓர்ந்து உணர்க. ஆசிரியர் விரிவஞ்சி ஒருமொழி முடிபு கூறாது ஒழிந்தமையின், இவர் இங்ஙனம் மயங்குவாராயினார் என்க.

பாயிர விருத்தி ஒருவகையான் முடிந்தது.

---

# முதற் சூத்திர விருத்தி

---

# எழுத்ததிகாரம்

எழுத்ததிகாரம் என்பது எழுத்தினது அதிகாரத்தை உடை
யது என அன்மொழித் தொகையாய் அப்படலத்திற்குக் காரணக் குறியாயிற்று.

எழுத்து என்றது அகரம் முதல் னகர விறுவாய்க் கிடந்த முப்பதும், குற்றியலிகர முதலிய மூன்றுமாம். அவற்றிற்கு எழுத்து என்னும் குறி முன்னர் "எழுத்தெனப் படுப" என்னும் சூத்திரத்தால்

ஓதுப ஆகலின் ஈண்டு எதிரது போற்றி ஆளப் பட்டது.

# அதிகாரம்

அதிகாரம்
அதிகரித்தல். அஃது இருவகைப்படும். அவற்றுள், ஒன்று வேந்தன் இருந்துழி இருந்து தன் நில முழுவதும் தன் ஆணையின் நடப்பச்

செய்வதுபோல ஒரு சொல் நின்றுழி நின்று பல சூத்திரங்களும் பல ஓத்துக்களும் தன் பொருளை நுதலி வரச் செய்வது; ஒன்று சென்று நடாத்தும் தண்டத் தலைவர்போல ஓரிடத்து நின்ற சொல் பல சூத்திரங்களோடும்

சென்று இயைந்து தன் பொருளைப் பயப்பிப்பது. இவற்றிற்கு முறையே வடநூலார் யதோத்தேச பக்கம் எனவும், காரிய கால பக்கம் எனவும் கூறுப. இது சேனாவரையர் உரையானும் உணர்க. அவற்றுள், ஈண்டு அதிகாரம் என்றது முன்னையது. அதனை உடையது எனவே, எழுத்தை நுதலி வரும் பல ஓத்தி

னது தொகுதி

எழுத்ததிகாரம் என்றவாறாயிற்று. எழுத்தினது அதிகாரத்தை உடையது என்புழி ஆறுவது, விணைமுதற் பொருண்மையின்கண் வந்த காரகம்.

## கருவியும் செய்கையும்

இப்படலத்துள்,

விதிக்கப்படுவன எல்லாம் கருவியும் செய்கையும் என இருவகைப்படும். அவற்றுள், கருவி நூன் உச

தொல்காப்பிய

முதற்சூத்திர விருத்தி

மரபு முதலிய நான்கு ஒத்தானும், செய்கை தொகை மரபு முதலிய ஐந்து ஒத்தானும் கூறப்படும். கருவி, பொதுவும் சிறப்பும் என இருவகைத்து. புணரியலுள் கூறப்படுவன செய்கை ஒன்றற்கே உரிய கருவியாகலின் சிறப்புக்கருவி, ஏனை மூன்று ஒத்தினும் கூறப்படுவன பொதுக் கருவி. அற்றேல், அவை ஓர் ஒத்தாகக் கூற அமையும் பிற எனின், அமையாது: சொல்லதிகாரத்துள் வேற்றுமை இயலும் வேற்றுமை மயங்கியலும் விளி மரபும் ஒரு நிகரனவாகவும் தம்முள் வேற்றுமை கண்டு வேறுவேறு ஒத்தாகக் கூறினாற்போல, ஈண்டும் தம்முள் வேற்றுமை உடைமைபற்றி நூன்மரபு மொழிமரபு பிறப்பியல் என மூன்று ஒத்தாகக் கூறினர்.

“நேரின மணியை

நிரல்பட வைத்தாங்கு
ஓரினப் பொருளை ஒருவழி
வைப்ப(து)
ஓத்தென மொழிப
உயர்மொழிப் புலவர்”
என்பது ஓத்திலக்கணம்
ஆகலின்.

# நூன்மரபு

அஃதாவது நூலினது மரபுபற்றிய பெயர் கூறுதல். எனவே, இதுவும் இவ்வோத்துட் கூறும் சூத்திரங்களுக்கெல்லாம் அதிகாரம் என்பது பெறப்பட்டது. மலை கடல் யாறு குளம் என்றற்றொடக்கத்து உலகமரபுபற்றிய பெயர்போலாது, ஈண்டுக் கூறப்படும் எழுத்து, குறில், நெடில், உயிர், மெய் என்றற்றொடக்கத்துப் பெயர்கள், நூலின்கண் ஆளுதற்பொருட்டு முதல்நூல் ஆசிரியனாற் செய்துகொள்ளப்பட்டமையின், இவை நூன்மரபுபற்றிய பெயராயின என்று அறிக. எனை ஓத்துக்களின் விதிக்கப்படும் பெயர்களும் நூன்மரபுபற்றி வரும் பெயர் ஆதல் உய்த்து உணர்ந்துகோடற்கு இது முன் வைக்கப்பட்டது.

இப்பெற்றி அறியாத உரையாசிரியர் முதலியோர், 'இவ்வதிகாரத்தாற் சொல்லப்படும் எழுத்திலக்கணத்தினை ஓராற்றாற் றொகுத்து உணர்த்துதலின், நூன்மரபு என்னும் பெயராயிற்று' என்பாரும்,* 'இவ்வோத்துட் கூறப்படும் விதிகள் மூன்று அதிகாரத்திற்கும் பொது ஆகலின் நூன்மரபு என்னும் பெயராயிற்று' என்பாருமாயினார்.† இவ்வதிகாரத்துட் கூறும் எழுத்

* இவ்வாறு கூறியவர் இளம்பூரணர்.
† இவ்வாறு கூறியவர் நச்சினார்க்கினியர்.



திலக்கணத்தைத் தொகுத்து உணர்த்தலாற்பெற்ற பெயராயின், அதிகார மரபு

எனப்படுவது அன்றி நூன்மரபு எனப்படாமை யானும், இவ்வோத்துட் கூறப்பட்டன செய்கை யோத்திற்கும் பொருள் அதிகாரத்துட் செய்யுள் இயல் ஒன்றற்குமே கருவி ஆவது அன்றி மூன்று அதிகாரத்திற்கும் பொதுவாகாமையானும் அவை போலி உரை ஆதல் அறிக.

க. எழுத்தெனப் படுப

அகரமுதல்

னகர இறுவாய் முப்பஃ தென்ப
சார்ந்துவரன் மரபின் மூன்றலங் கடையே

என்பது சூத்திரம்.
என்னுதலிற்றோ ? எனின்,
அகர முதலிய வற்றிற்குப்
பொதுப்பெயர் கூறுதல்
நுதலிற்று.

(இ - ள்.)
நெடுங்கணக்கினுள் அகர
முதல் னகரம் ஈறாகக் கிடந்த
முப்பதும் எழுத்து என்று
சொல்லப்படுவன என்று
கூறுவர் நூலோர்;

தனித்தானும், ககர
முதலியனபோல் அகர மொடு
சிவணியானும் இயங்கும்
இயல்பின்றி ஒரு
மொழியைச் சார்ந்து
வருதலே தமக்கு
இலக்கணமாக உடைய
மூன்று அல் லாதவிடத்து
என்றவாறு.

எனவே, சார்ந்து வரன்
மரபின் மூன்று உள
என்பதூஉம் ஈண்டே
பெற்றாம்.

அகர முதலிய
முப்பதும்
நெடுங்கணக்கினுட்
பெறப்படு

தலின், அவற்றை விதந்து ஓதாது, முதலும் இறுதியும் எடுத்து ஓதி அநுவதித்தார். அநுவதித்தல் எனினும் வழிமொழிதல் எனினும் ஒக்கும். அநுவாதமாவது முன்னர்ப் பெறப்பட்டது ஒன்றனை வேறு ஒன்று விதித்தற்பொருட்டுப் பின்னரும் எடுத்து ஓதுதல். அதனால், அது கூறியது கூறல் என்னும் குற்றம் ஆகாது வழிமொழிதல் என்றுயிற்று. வழிமொழிதற்கு முன்னர்ப் பெறப்பட்டதனைப் புரோவாதம் என்பர் வடநூலார்.

இனிச் சார்ந்து வரன் மரபின் மூன்றும் அகரம் முதலியன போலத் தனித்து நிற்றல் ஆற்றுமையின், நெடுங்கணக்கினுட்

பெறப்படாவாயின
ஆகலான், அவற்றை
முன்னர் வகுத்து ஓதுப.

உ௬ தொல்காப்பிய முதற்சூத்திர விருத்தி

'முப்பஃது' என்பது இனைத்து என அறிந்த பொருளின் வினைப்படு தொகுதி ஆகலின், ஆண்டு வேண்டப்படு முற்றும்மை விகாரத்தாற் றொக்கது; "இருதோள் தோழர்பற்ற"[1] என்புழிப் போலச், சூத்திரமும் செய்யுள் ஆகலின்.

இனி, உரையாசிரியரும் நச்சினார்க்கினியாரும் இச்சூத்திரம்,

பெயரும் முறையும் தொகையும் உணர்த்திற்று என்றும், அ ஆ முதலியனவே பெயர் என்றும், அம்முறையே முறை என்றும், முப்பஃது எனத் தொகை விதிக்கப்பட்டது என்றும் உரைத்தாரால் எனின், அற்றன்று. அஃது ஆசிரியர் கருத்தாயின், அ ஆ இ ஈ என முழுதும் எடுத்தோதி முறைக்கு ஏதுவும் கூறுவர். அவ்வாறு கூறாது, 'அகர முதல் னகர இறுவாய்' என அநுவதித்தே ஒழிந்தமையானும், எழுத்து

என்பது ஒரு பொருள், அதற்கு அ ஆ முதலியன பெயர் என்றல் பொருந் தாமையானும், அ ஆ முதலிய அ ஆ முதலியவற்றிற்குப் பெய ராதல் கூற வேண்டாமையானும், வேண்டும் எனிற் சொற்களும் பொருளை உணர்த்தாது, அவை தம்மையே உணர்த்தும்வழி அவற்றிற்கு அவை பெயராதல் கூறாமை நன்றக்கூறலாம் ஆக லானும்,

முறையும் தொகையும் செய்கை முதலியவற்றிற்குக் கருவி அன்மையின், அவற்றை விதித்தலாற் பயன் இன்மை யானும், அவர் உரை போலி உரை என அறிக. இச் சூத்திரத்தின் ஒழிபு ஆகிய "அவைதாம், குற்றியலிகரம்"[2] என்னுஞ் சூத்திரத்துள் 'எழுத்தோர் என்ன' என எழுத்தாதல் விதிக்கின்றமை யானும், ஈண்டும், 'அகர முதல் னகர இறுவாய் முப்பது' என அநுவதித்து, அவற்றிற்கு எழுத்து என்னும் பெயரே விதிக்கப் பட்டது எனக்கொள்க. அகர முதலிய பொருட்கு ஈண்டு எழுத்து என்னும் பொதுப்பெயர் கூறி, "அவற்றுள், அ இ உ"[3] "ஆ ஈ ஊ ஏ"[4] "ஔகார விறுவாய்"[5] "னகார விறுவாய்"[6] "வல்லெழுத்தென்ப"[7] "மெல்லெழுத் தென்ப"[8] "இடையெழுத் தென்ப"[9] என்னுஞ் சூத்திரங்களாற் சிறப்புப்பெயர் கூறுமாறு அறிக. சூத்திரம் வேறு பொருள் தாராமைப்பொருட்டு அன்றே ஆசிரியர் நூன்மரபு என அதிகாரம் செய்துகொண்டதூஉம் என்க.

---

1. சிந்தாமணி.

2. தொல். நூன்மரபு சூ. உ.
3. ,, ,, சூ. ௩.
4. ,, ,, சூ. ௪.
5. ,, ,, சூ. ௮.
6. தொல். நூன்மரபு சூ. ௬.
7. ,, ,, சூ. ௧௬.
8. ,, ,, சூ. ௨௦.
9. ,, ,, சூ. ௨௧.

தொல்காப்பிய
முதற்சூத்திர விருத்தி
உள

# பெயரும் பொருளும்

அற்றேல்,

"னஃகா னொற்றே யாடூஉ வறிசொல்,"
"ளஃகா னொற்றே மகடூஉ வறிசொல்"

(தொல். கிளவி. ரு - சு)

என்றாற்போலப் பிறாண்டும் பொருளை முன்னர்க் கூறிப் பெயர் பிற்கூறுப ஆகலானும், இதற்கு இது பெயர் என்று பொருளை முன்னர்க் காட்டிப் பெயர் கூறுதலே மரபு ஆகலானும், ஈண்டும் 'அகர முதல் னகர விறுவாய் முப்பஃதும் எழுத்தெனப் படுப என்ப' என்று ஓதல் வேண்டும். அவ்வாறு ஓதாது 'எழுத்தெனப் படுப அகர முதல் னகர விறுவாய்' என மாறிக் கூறியது என்னையோ ? எனின் ; நன்று வினயினய் ; அவ்வாறு ஓதுதலே மரபு ஆயினும், எழுத்து என்பது மங்கலமொழி ஆகலின், முதற்கண் மங்கலங் கூறுதல் மரபு எனக் கருதி, 'எழுத்தெனப் படுப அகரமுத னகர விறுவாய்' என்றார். என்றாரேனும்,

"எழுத்துப் பிரிந் திசைத்தல் இவணியல் பின்றே,"

(தொல். உரி. கூசு)

"எழுத்தோ ரன்ன
பொருள்தெரி புணர்ச்சி"

(தொல். புண. ௩கூ)

எனப் பிறாண்டும் எடுத்து ஆளுதலான், அவ்வாட்சிபற்றி எழுத்து என்பது பெயர், அகர முதல் னகர விறுவாய் என்பது பெயர்ப்

பொருள் எனத் துணிந்த

பின்னர், அகரமுதல னகர

விறுவாய்

முப்பஃது எழுத்து எனப் படுப வென்ப என்னும் கிடக்கை முறை உள்ளத்தின்கண் நிலைபெறும்; அதன் பின்னர்ச் சூத்திரப் பொருள் இனிது விளங்கும் ஆதலின், ஆண்டுப் பெயர் பின்னுத லிற் பிற்றாமை உணர்க. இதுவே அண்மைநிலை.

இவ்வாறன்றி எழுத்து என்பது சென்று நடாத்தும் தண்டத் தலைவர்போல் அதிகரிப்பது எனக்கொண்டு பின்னர் வந்தியை யும் என்றலும் ஒன்று.

இனி,

முதல்நூலாசிரியனாற்

படைத்திட்டுக்கொண்ட பெயர்

என்னுது, உலகத்தில் எழுதப்பட்டவை எல்லாம் எழுத்து ஆம் அன்றே? அதனை ஈண்டு ஆளுதற்பொருட்டு முதல் நூலாசிரிய

 தொல்காப்பிய

முதற்சூத்திர விருத்தி

னுல் வரையறுத்துக் கொள்ளப்பட்டது என நியம விதியாகக் கொள்ளினும் அமையும்.

"வல்லெழுத்
தென்ப கசட தபற,"

"மெல்லெழுத்
தென்ப ஙஞண நமன,"

"இடையெழுத்
தென்ப யரல வழள,"

(தொல். நூன். ௧௯ - ௨௧)

"உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே
யஃறிணை என்மனார் அவரல பிறவே"

(தொல். இளவி. க)

என்றற் றொடக்கத்தனவும் அவ்வாறே கண்டுகொள்க.

அற்றேல், குற்றியலிகரம் என்னும் குறியீட்டான் நாகியாது எனச் செய்கை செய்தல் வேண்டும்; செய்கை செய்த பின்னர் அவ்வெழுத்துக் குற்றியல் இகரம் எனல் வேண்டும்; இஃது ஒன்றனை ஒன்று பற்றுதல் என்னும் குற்றம் ஆம் பிற எனின்? ஆகாது;

நாகு யாது என்பனவே சொல்லாகலின் நாகியாது என்புழிப் பெறப்பட்ட குற்றியல் இகரம் வழு என்று காணல் உற்றுழி

"யகரம் வரும்வழி யிகரங் குறுகும்"
(தொல். குற்றி. புண. ௫)

என்னும் சூத்திரம் வழாநிலை ஆதல் உணர்த்த வந்தது அல்லது முன் இல்லாத குற்றியல் இகரத்தை விதிக்க வந்தது அல்லாமை

யின், எல்லாச் சொற்களும் படைப்புக் காலம் தொடங்கி நிலைபெறு உடைமையின்.

இனி, இலக்கணம் ஒன்றே கண்ணுக நூல்கொண்டு உணரப் புகுவார்க்கும் கேண்மியா என்புழி மகரம் பற்றுக்கோடாக நின்ற குற்றியல் இகரம் உணர்ந்தவழி இதுபோன்றன எல்லாங் குற்றியல் இகரம் என்று உணரப்படுதலின், ஆண்டும் அக்குற்றம் இன்மை அறிக; ஒரு குடத்தைக் காட்டி இது குடம் என்று உணர்த்த, உணர்ந்தார்க்கு இந்நிகரனவாய் வனையப்படுவன எல் லாம் குடம் என்று உணரப்படும் ஆகலின். அங்ஙனம் அல்லாக் கால், மனையகத்துக் குடம் உளது என்றவழி முன் காணுத குடத்தை அறிதல் கூடாது என்பது. எழுத்து முதலியவற்றிற் கும் இவ்வாறே கண்டுகொள்க.

# தொல்காப்பிய

# முதற்சூத்திர விருத்தி

## உ சிவ

இவ்வெழுத்து என்னும் குறி, வேற்றுமைத்தொகை, வினைத் தொகை, மெய்ம்மயக்கம், உடனிலைமயக்கம், இரட்டைக்கிளவி என்பனபோல உடனிகழ்ச்சிபற்றிய பெயராகாது, அகரம் முத லியவற்றிற்குத் தனித்தனியே பெயராதல் உத்திவகையான் உணர்ந்துகொள்க.

சொல்லும் பொருளும் பேதாபேதம் ஆகலின், அதுபற்றி,

"உறுதவ நனியென வரூஉம் மூன்றும்
மிகுதி செய்யும் பொருள வென்ப;"

(தொல். உரி. ௩)

"கறுப்புஞ் சிவப்பும்
வெகுளிப் பொருள,"

(தொல். உரி. எசு)

"புதிதுபடல்
பொருட்டே யாணர்க்
கிளவி,"

(தொல். உரி. அ௩)

எனச் சிலவற்றை வேற்றுமை நயம்படவும்,

"கெடவரல் பண்ணையா யிரண்டும் விளையாட்டு,"

(தொல். உரி. உ௩)

“தடவும் கயவும்
நளியும் பெருமை”
(தொல். உரி. உசு)

எனச் சிலவற்றை ஒற்றுமை நயம்படவும் கூறுவர் ஆகலின், ஈண்டு எழுத்தெனப்படுப வகரமுத னகர விறுவாய் என வொற்றுமை நயம்படக் கூறிற்று. சொல்லும் பொருளும் வேறு என்பார், எழுத்து எனப் பெயர் பெறுவனவற்றை எழுத்து என்றது ஆகுபெயர் என்ப. இனிச் சொல்லும் பொருளும் ஒன்று என்மார் “புதிதுபடற் பொருட்டே யாணர்க் கிளவி” என்பது இராகுவினது தலை என்றாற்போலும் என்பர்.

இத்துணையும் கூறியவாற்றானே. அகர முதலியவற்றிற்கு எழுத்து என்னும் குறியிடுதற்கு எழுந்தது இச்சூத்திரம் என்று உணர்ந்துகொள்க.

எழுத்து என்று ஒழியாது, ‘எனப் படுப என்ப’ என்றார், இது முதல்நூல் ஆசிரியனால் விதிக்கப்பட்டுத் தொன்றுதொட்டு வரும் குறி என்பது அறிவித்தற்கு.

# முறை

அற்றேல் அஃது ஆக ; நெடுங்கணக்கினுள் அகர முதல் னகர விறுவாய்க் கிடக்கை, முறையாதற்குக் காரணம் என்னையோ ? அறிதல் வேண்டினேன் என்பையாயிற் காட்டுதும்.

## மெய் எழுத்துக்கள்

ழகர றகர னகரங்கள் மூன்றும் தமிழ் எழுத்து என்பது அறிவித்தற்கு இறுதிக்கண் வைக்கப்பட்டன. அவற்றுள்ளும் ழகரம் இடை எழுத்தாகலின், அதுபற்றி இடையெழுத்தோடு சார்த்தி அவற்று இறுதிக்கண் வைக்கப்பட்டது. வடமொழியின் லகாரம் ளகாரமாகவும் உச்சரிக்கப்படுவது அன்றித் தனியே ஓர் எழுத்து அன்மையின், அச் சிறப்பின்மைபற்றி இடையெழுத்தாகிய ளகாரம் ழகாரத்திற்கும் பின் வைக்கப்பட்டது. யரலவ்க்கள் நான்கும் முறையே அடி அண்ணமும் இடை அண்ணமும் அண் பல் முதலும் இதழும் என்னும் இவற்றின் முயற்சியாற் பிறத்தலான், அப்பிறப்பிடத்து முறையே முறையாக வைக்கப்பட்டன.

இனி ஒரு கிகரனவாய இடை எழுத்துக்களில் இவ்விரண்டு வேறு பிரித்து, யரக்களும் லவக்களும் ழளக்களும் தம்முள் இனம் என்றும், இனம் ஆதல்பற்றி முறை கூறப்பட்டன என்றும், பிறப்பே அன்றி, அளவு, செய்கை, பொருள், வடிவு என்பவற்றுள் எற்றன ஒத்தலும் இனம் ஆதற்கு எது என்றும் கூறுவாரும் உளர். அது பொருந்தாது. ஒருவாற்றான் ஒத்தலும் ஒருவாற்றான் வேறு ஆதலும் உடைமைபற்றி அன்றே இனம் என்று வழங்கப்படுவது. அவற்றுள், இடை எழுத்து ஆறும் இடப்பிறப்பான் ஒத்தலும் முயற்சிப்பிறப்பான் வேறு ஆதலும் உடைமையின் இடைக்கணம் என ஓர் இனம் ஆயின. உயிர்க்கணம், வன்கணம், மென்கணம் என்பவற்றிற்கும் இஃது ஒக்கும். அவற்றுள், அ ஆக்கள் முதலியனவும், கஙக்கள் முதலியனவும் அக முயற்சிப் பிறப்பான் ஒத்தலும், குற்றோசை நெட்டோசையும் வல்லோசை மெல்லோசையும் ஆகிய புறமுயற்சிப் பிறப்பான் வேறுதலும் என்னும் இருதன்மையும் உடைமையின், அவ் வேறுபாடுபற்றி வேறு பிரித்து இவ்விரண்டு ஓரினம் எனவும் வைக்கப்பட்டன. இடையெழுத்துக்களுள் இவ்விரண்டினை வேறு பிரித்து இனம் என்றற்கு அவ்வாறு ஓர் இயைபு இன்மையின், அவை அவ்வாறு இனம் ஆதல் யாண்டையது என்க.

அல்லதூஉம் அ ஆக்கள் கஙக்கள் முதலியனபோல யரக்கள் முதலியனவற்றை இனம் என்றல் செய்கைக்குக் கருவி ஆகாமை யானும், முறை பெறுதற்கு ஏது எனின், முறை கூற வேண்டாமை மேற்காட்டினும் ஆகலானும், உலகத்தும் பிறப்பு ஒத்தல் பற்றியே இனம் என்று வழங்குப் ஆகலானும், இடப்பிறப்பு ஒத்தல் ஆறுக்கும் பொது அன்றி இவ்விரண்டற்குச் சிறந்தது அல்லாமையானும், அது பொருந்தாமை யுணர்க. இனம் ஆதல் அறிந்து கோடற்பொருட்டே ஆசிரியர் பிறப்பியல் கூறினர். அவ்வாறு அன்று என்பாரை, எழுத்ததிகாரத்துட் கூறும் பொருள் எல்லாஞ் செய்கையும் கருவியும் என இரண்டாய் அடங்கும் என்பது எல்லார்க்கும் ஒப்ப முடிந்தது ஆகலாற் பிறப்பியல் வேறு ஒன்றற்குக் கருவி ஆகாமையிற் பயன் இல் கூற்றாம் எனக் கூறி மறுக்க. வடநூலாரும் பிறப்பு ஒத்தல் ஒன்றே இனம் அடைத்தற்கு ஏது என்ப. இனி அளவு முதலிய ஒத்தலின் இனமாம் என்பார்க்கு, னகரத்தோடு மகரத்திற்கு அளபு ஒக்கும்; முகம் முகன் எனப் பொருளொக்கும்; ககர சகர தகரங்கட்கு வடிவு ஒக்கும்; ரகர ழகரங்கட்குச் செய்கை ஒக்கும். இவ்வாறே இனமல்லாத ஏனையவும் இவற்றுள் ஏற்றன ஒக்கும் ஆகலின், அவையும் இனம் ஆவான் சொல்லுமாறு அறிக. அன்றியும், ஈண்டுக் கூறினவை எல்லாம் செய்கைக்குக் கருவியாம் எனக் கூறி, அச் செய்கையை ஈண்டு இனம் அடைத்தற்குக் கருவியாம் எனக் கூறுதல், ஒன்றனை ஒன்று பற்றிநிற்றல் என்னும் குற்றமாதல் அறிக.

இனிக் கஙக்களும் சஞக்களும், டணக்களும், தநக்களும், பமக்களும் அடிநா அண்ணம், இடைநா அண்ணம், நுனிநா அண்ணம், அண் பல்லடி இதழ் என்னும் இவற்றின் முயற்சியாற் பிறத்தலான், அப்பிறப்பிடத்தின் முறையே முறையாக வைக்கப் பட்டன. வலியாரை முன்வைத்து மெலியாரைப் பின்வைத்தல் மரபாகலின், வல்லெழுத்துக்கள் முன்னும், அவ்வவற்றிற்கு இனம் ஒத்த மெல்லெழுத்துக்கள் அவ்வவற்றின் பின்னுமாக வைக்கப்பட்டன. அவ்விரண்டும் நோக்கி அல்லது இடை நிகரனவாய் ஒலித்தல் அறியப்படாமையின், அதுபற்றி இடையெழுத்துக்கள் அவ்விருகூற்றிற்கும் பின் வைக்கப்பட்டன.

## உயிரும் மெய்யும்

அகர முதலிய பன்னீர் உயிருந் தனித்து இயங்கும் ஆற்றல் உடைமையானும், ககர முதலிய பதினெட்டு மெய்யும் அகரத்



தோடு கூடி அல்லது இயங்கும் ஆற்றல் இன்மையானும் உயிர் முன்னும் மெய் பின்னுமாக வைக்கப்பட்டன.

## உயிரெழுத்துக்கள்

இனி உயிர்களுள், அ, இ, உ என்பன முறையே அங்காந்து கூறு முயற்சியானும், அவ்வங்காப்போடு அண் பல்லடி நாவிளிம்பு உறக்கூறு முயற்சியானும், அவ்வங்காப்போடு இதழ் குவித்துக் கூறு முயற்சியானும் பிறத்தலான், அப்பிறப்பு இடத்து முறையே முறை ஆக வைக்கப்பட்டன. ஆகார ஈகார ஊகாரங்கள் அகர முதலியவற்றிற்கு இனம் ஆகலின், அவற்றைச் சார வைக்கப் பட்டன. நெட்டெழுத்தாவது நீரும் நீரும் சேர்ந்தாற்போலக் குற்றெழுத்து இரண்டு ஒத்து நின்று நீண்டு இசைப்பது ஒன்றாக லின், அஃது உணர்ந்து கோடற்குக் குற்றெழுத்துக்களின் பின் னர் நெட்டெழுத்துக்கள் வைக்கப்பட்டன. அற்றேற் குற் றெழுத்திற்கு ஓதிய விதி நெட்டெழுத்திற்கும் வருமாலோ எனின், அற்றன்று, வேறு நின்ற குற்றெழுத்திற்கே விதி பெறப் படுதலின். இன்னும் இக்கடா விடைகள் எல்லாம் மாபாடியத் தும் கையடத்தும் இரண்டாமாணிகத்திற் கண்டுகொள்க.

## நெட்டெழுத்தும் -அளபெடையும்

இந்நெட்டெழுத்துக்கள் மொழிக்காரணமாய் வேறுபொருள் தந்து நிற்றலின், அதுபற்றி வேறு எடுத்து எண்ணி உயிர் பன்னீர் எழுத்து எனப்பட்டன. அளபெடை அந்நெட்டெழுத் தோடு குற்றெழுத்து ஒத்து நின்று நீண்டு இசைப்பதொன்றாயி னும், மொழிக்காரணமாய் வேறு பொருள் தாராது, இசை நிறைத்தன்மாத்திரைப் பயத்தது ஆய் நிற்றலின், வேறு எழுத்து என வைத்து எண்ணப்படாதாயிற்று என்பது நுண்ணுணர்

வான் ஓர்ந்து உணாக.

"குன்றிசை மொழிவயின் நின்றிசை நிறைக்கும்
நெட்டெழுத் திம்பர் ஒத்தகுற் றெழுத்தே"

என்றதூஉம் இக்கருத்தே பற்றி என்க. இப்பெற்றி அறியாதார் நெடிலும் குறிலும் விரலும் விரலும் சேர நின்றாற்போல இணைந்து நின்று அளபெடுக்கும் எனவும், அளபெடை எழுத்தி உயிரெழுத்துள் அடங்காது எனவும், சார்பெழுத்து என வைத்தி வேறு எண்ணப்படும் எனவும் தமக்கு வேண்டியவாறே கூறுப. நெடிலும் குறிலும் அவ்வாறு நின்று அளபெழும் என்றல் பொருந்

# தொல்காப்பிய

# முதற்சூத்திர விருத்தி

௲௲

தாமைக்கு எழுத்தெடை என்றாது அளபெடை என்னும் குறியீடே சான்று ஆதல் அறிக. அற்றேல், ஓரெழுத்தினையே இரண்டுமாத்திரையும் ஒருமாத்திரையுமாகப் பிரித்து அசைத்துச் சீர் செய்தல் பொருந்தாது எனின் அற்றன்று: எழுத்துவகையான் என்றாது,

"மாத்திரை வகையால் தளைதம கெடாநிலை
யாப்பழி யாமையென் றளபெடை வேண்டும்"

என்றமையின், எழுத்திற்கு மாத்திரை கோடலும், அசைத்தலும், சீர் செய்தலும் தளை யறுத்தலும் ஓசைபற்றி யல்லது எழுத்துப் பற்றி அல்ல என்க.

இன்னும் வடநூலார் அ என்னும் ஓர் எழுத்தே ஒரு மாத்திரையாய் உச்சரிக்குங்காற் குற்றெழுத்து என்றும், இரண்டு மாத்திரையாய்க் கூட்டி உச்சரிக்குங்கால் நெட்டெழுத்து என்றும், மூன்று மாத்திரையாய் உச்சரிக்குங்கால் அளபெடை எழுத்து என்றும் மூவகைப்படும் எனவும், அம்மூன்றும் எடுத்தல் படுத்தல் நலிதல் என்னும் ஓசைவேறுபாட்டால் ஒன்று மூன்றாய் ஒன்பது வகைப்படும் எனவும், அவ்வொன்பது வகையும் மூக்கின் வளியொடு சார்த்தியும் சார்த்தாதும் உச்சரிக்கும் ஆற்றால் ஒவ்வொன்று இவ்விருவகைத்தாய்ப் பதினெட்டாம் எனவுங் கூறுப. இவ்வாறே ஏனை எழுத்திற்கும் கொள்வர். அவ்வாறு வேறுபடினும், உயிரெழுத்தாந் தன்மையில் திரியாவாய்ப் பதினெட்டும் ஓரினமாம் என்றே கொள்வர். இதனானும் உயிரளபெடை உயிரின் வேறு ஆகாமை உணர்க. இதனானே ஒற்றளபெடையும் ஒற்றின் வேறு அன்மை உணர்க.

இனி எகரமாவது அகரக்கூறும் இகரக்கூறும் தம்முள் ஒத்திசைத்து நரமடங்கல்போல் நிற்ப தொன்று ஆகலானும், ஒகரமாவது அகரக்கூறும் உகரக்கூறுந் தம்முள் ஒத்திசைத்து அவ்வாறு நிற்பதொன்று ஆகலானும், அவை அவற்றின் பின்னர் முறையே வைக்கப்பட்டன. ஏகார ஓகாரங்கள் இனம் ஆகலின், அவற்றின் பின் முறையே வைக்கப்பட்டன. அகரமும் யகரமும் இகரமும் தம்முள் ஒத்திசைத்து நிற்பதொன்று ஆகலின், எகர ஏகாரங்களின் பின்னர் ஐகாரமும், அகரமும் வகரமும் உகரமும் தம்முள் ஒத்திசைத்து நிற்பதொன்று ஆகலின், ஒகர ஓகாரங்களின் பின்னர் ஔகாரமும் வைக்கப்பட்டன. இவ்வாறு முதல்பற்றி எ ஒ ஐ ஔ என்னும் நான்கினையும் வடநூலார்

சந்தியக்கரம் என்பர்.
கையடனார்
நரமடங்கல்போல் என்று
உவமையும் கூறினார்.

இக்கருத்தேபற்றி
ஆசிரியர்,
“அகர இகரம்
ஐகாரம் ஆகும்”
“அகர உகரம்

ஔகாரம் ஆகும்"
(தொல். மொழிமரபு, சூ. உக - உஉ.)

எனக் கூறி, ஐ என்னும் நெட்டெழுத்தின் வடிவு புலப்படு தற்கு அகர இகரங்களே அன்றி அவற்றிடையே யகரமும் ஒத் திசைக்கும் என்பார்,

"அகரத் திம்பர் யகரப் புள்ளியும்
ஐயெ னெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்"

(தொல். .மொழிமரபு, சூ. உந.)

என்றும், 'மெய்பெற' என்ற இலேசானே ஔ என்னும் நெட்டெழுத்தின் வடிவு புலப்படுத்தற்கு அகர வுகரங்களே அன்றி

அவற்று இடையே வகரமும் ஒத்திசைக்கும் என்றும், இம்பர் உம்பர் என்றாற்போல்வன காலவகை இடவகைகளான் மயங்

கும் ஆகலின், இவற்றின் முதற்கண் நிற்பது யாதோ? கண் நிற்பது யாதோ? என்னும் ஐயம் நீக்குதற்கு

இறுதிக்

"இகர யகர மிறுதி விரவும்"

(தொல். மொழிமரபு, சூ. உரு)

என்றுங் கூறினர். 'மொழிந்த பொருளோ டொன்ற வவ்வயின் மொழியா ததனை முட்டின்று முடித்தல்' என்னும் உத்தியான் எகர ஏகாரங்கள் ஒகர ஓகாரங்கள் அவ்வாறாதலும் கொள்ள வைத்தார்.

மாபாடியத்துள் ஊகாரத்தின் பின்னின்ற வடவெழுத்து நான்கு உயிர்க்கும் இடையே ரகர லகரக்கூறுகள் ஒத்துநிற்கும் என்ற ஆசிரியர் பதஞ்சலியார்க்கு ஐ ஔ என்புழியும் இடையே யகர வகரக்கூறுகள் விரவி நிற்கும் என்பது உடன்பாடு ஆதல் பெற்றாம்.

எகர முதலியவற்றுள், அகரக்கூறு குறைவும் இகர உகரக் கூறுகள் மிகுதியும் ஆம் எனவும் உணர்க. இதுவும் மாபாடியத்

திற்கண்டது. வடநூற்

கடலை நிலைகண்டு அறிந்த

சேனாவரை

யர் எழுத்ததிகாரத்திற்கு உரைசெய்தார் ஆயின், இன்னோரன்ன பொருள் அனைத்துந் தோன்ற ஆசிரியர் கருத்து உணர்ந்து உரைப்பர். அவர் சொல்லதிகாரம் போலப் பெரும்பயன் படாமை கருதி, எழுத்திற்கு உரை செய்யாது ஒழிந்தமையின்,

தமிழ்நூல் ஒன்றே வல்ல உரையாசிரியரை உள்ளிட்டோர் உரையை ஆசிரியர் கருத்தாகக்கொண்டு, பின்னுள்ளோரும்

மயங்குவாராயினர் என்பது.

"அகர இகரம் ஐகார மாகும்"

என்புழி, 'ஆகும்'

என்றதனால் ஆகாது என

பாரை,

விலக்கப்படும் என்

“பன்னீ ருயிரு மொழிமுத லாகும்”

௯௦

(தொல். மொழிமரபு, சூ. உசு)

என்புழியும் ஆகும் என்பதனற் பன்னீருயிரும் மொழிமுதல் ஆகா என விலக்கப்படும்போலும் எனக்கூறி மறுக்க; அன்றியும் இயற்கையான் நின்ற ஐகார ஔகாரங்கள் வேறு; போலியாய் இவ்வாறு வரும் ஐகார ஔகாரங்கள் வேறு எனக் கொளின், இவற்றை எடுத்து ஓதி விலக்குதலால் ஒருபயன் இன்மையிற் பயனில மொழிதல் ஆமாறு உணர்க. யாம் கூறியதே வட

நூலார்க்கும் உடன்பாடு ஆதல் மாபாடியம் வல்லார்வாய்க் கேட்டுணர்க. வடநூல் உணர்ந்தார்க்கு அன்றித்

தமிழ் இயல்பு விளங்காது என்பதும் உணர்ந்துகோடற்கு அன்றே ? பாயிரத்துள், “ஐந்திர நிறைந்த தொல்காப்பியன்”[1] என்றதூஉ மென்க.

எகர ஒகரங்கள் ஒருவாற்றாற் சிறப்பெழுத்தாயினும், பாகத மொழியிற் பயின்று வருதலானும், சாமவேதம் உடையாருள் ஒருசாரார் இசைபற்றிக் குழூஉக்குறிபோலக் கொண்டு ஓதுப ஆகலானும், இறுதிக்கண் வையாது முறைபற்றி எகார ஒகாரங்களின் முன் வைக்கப்பட்டன. ஈண்டுக் கூறியவாற்றானே அகரம் உயிரெழுத்துக்களினும் கலந்து நிற்குமாறு அறிக.

இத்துணையும் முறையாமாறு காட்டப்பட்டது. எழுத்துக்களுக்குப் பிறப்பு வடநூலார் சிறுபான்மை வேறுபடக் கூறுப. அஃது உச்சரிக்கும் ஓசை வேற்றுமைபற்றி எனக்கொள்க.

---

1. தொல். பாயிரம்.

நடசு தொல்காப்பிய முதற்சூத்திர விருத்தி

# முப்பஃது என்னும் தொகை

இனி, 'எழுத்தெனப் படுப அகர முதல் னகர இறுவாய்' என்றொழியாது, முப்பஃது என்னும் தொகை கூறியது எற்றுக்கு எனின், அது கூறாக்கால், எழுத்து என்றற்கு உரியவை வகரம் தொடங்கி னகர இறுவாய்க்கிடந்த ஐந்துமேயோ? அகரம் தொடங்கி நகரம் ஈறாய்க்கிடந்த இருபதுமேயோ?

அகரத்தைத் தனக்கு

முதலாக உடைய ஆகாரமும்

னகரத்தைத்

தனக்கு ஈறாக உடைய றகரமும் என்னும் இரண்டுமேயோ? அகாரமு முதலும் னகரமும் இறுவாயும் என்னும் சொற்களேயோ? எனவும் பலவாற்றான் ஐயம் நிகழும் அன்றே? அவ்வையம் நீக்குதற்கும் இம் முப்பதுமே அன்றி வடமொழியிற் கூறும் ஏனை எழுத்துக்கள் ஈண்டுக் கொள்ளப்படா என்றற்கும் என்க.

# சார்பெழுத்து

ஒருமொழியைச் சார்ந்து வரும் இயல்பு அன்றித் தனித்து இயங்கும் இயல்பு தமக்கு இல என்றலின், அவை தம்மையே

எடுத்து ஓதிக்

காட்டலாகாமையின், வரும்

சூத்திரத்தான் அவற் றிற்கு

வேறு வேறு பெயரிட்டு,

"அவை தாம்

குற்றிய லிகரம்

குற்றிய லுகரம்
ஆய்தம்''
(தொல். நூன்மரபு, உ)
என்றும், அம்மூன்றும்
புள்ளி பெறுதல்பற்றிப்
பொதுப்பெய ராக,
''மூப்பாற்
புள்ளியும்''
(தொல். நூன்மரபு, உ)
என்றும், அவை தனித்து
எழுதப்படா ஆயினும்
மொழியொடு சார்த்தி
எழுதப்படுதலின், எழுத்து
என்னும் குறியீட்டிற்கும்

உரிய என்பார்,

"எழுத்தோ ரன்ன"

(தொல். நூன்மரபு, உ)

என்றும் ஓதினர். முற்றியல்

இகர உகரங்களோடு

இவற்றிடை வேற்றுமை

தெரிந்து கோடற்பொருட்டு

இகரம் உகரம் என்

றொழியாது,

"குற்றிய லிகரங்
குற்றிய லுகரம்"
(தொல். நூன்மரபு, ௨)
என்றார்.

கேண்மியா, வரகு என்பனவற்றின் இகரமும் உகரமும், போலும் என்புழி அரைமாத்திரையாய் நின்ற மகரம், போன்ம்

என லகரம் ணகரமாய்த் திரிந்து, ஈரொற்று உடன்நின்ற காரணத்தாற் பின்னர்க் கால்மாத்திரையாய் நின்றாற்போல, முன்னர் ஒரு மாத்திரையாய் நின்று, பின்னர் ஒரு காரணம்பற்றி, அரைமாத்திரை ஆகாது, மகரமும் வல்லெழுத்தும் ஆகிய மெய்யெழுத்தினைச் சார்ந்து, என்றும் அரைமாத்திரையாயே நிற்கும் ஒரு தன்மைய ஆயினும், அப்பெற்றி உணராது, இவை அரைமாத்திரை பெறுதல் மகரக்குறுக்கம் போலச் செயற்கையாற்போலும் என்று உலகமலேயாமைப்பொருட்டு இவை இங்ஙனம் ஆதல் இயல்பு என்பார், குற்றிகரம் குற்றுகரம் என்றொழியாது, குற்றிய லிகரங் குற்றியலுகரம் எனக் குறி இட்டார். இக்குறியீடும் உணராதார் ஒருமாத்திரையாய் நின்ற குற்றெழுத்துக்களே இடமும் பற்றுக்கோடும் சார்ந்த காரணத்தால் அரைமாத்திரையாய்க் குற்றியல் இகரம் குற்றியல் உகரம் என நின்றன எனக் கூறித் தமது அறியாமையைப் புலப்படுப்பர். ஆசிரியர்,

"குற்றிய லுகரமும் அற்றென மொழிப"
(தொல். புண. ௩)

என்னுஞ் சூத்திரத்தாற் குற்றியல் உகரமும் புள்ளிபெற்று நிற்கும் என முற்றுகரத்தோடு இதனிடை வரிவடிவினும் வேற்றுமை தோன்றக் கூறி, உம்மையாற் குற்றியல் இகரமும் புள்ளி பெற்று நிற்கும் என்று ஓதினமையானும்,

"குற்றிய லிகரம்

நிற்றல் வேண்டும்''

(தொல். மொழிமரபு, க)

எனவும்,

''குற்றிய லுகரம்

வல்லா றூர்ந்தே''

(தொல். மொழிமரபு, ந)

நிற்றல்வேண்டும் எனவும், கூறியது அன்றி இவைபற்றி மாத்திரை குறுகும் என்னுமையானும்,

நஅ தொல்காப்பிய

முதற்சூத்திர விருத்தி

''புணரிய

னிலையிடைக் குறுகலு

முரித்தே''

"ஆயிரு மூன்றே

என்புழியும்,

"யகரம் வருவழி

என்புழியும்,

(தொல். மொழிமரபு, உ)

உகரங் குறுகிடன்''

(தொல். குற்றியலுகரப்புணரியல், ௪)

இகரங் குறுகும்''

(தொல். குற்றியலுகரப்புணரியல், ௫)

"கொங்கலர் பூம்பொழில்
குறுகினர் சென்றுழி"

"தீவினை முதிர்வலைச்
சென்றுபட் டிருந்த
கோவலன் றன்னைக்
குறுகின னாகி"

"கோயின் மன்னனைக்
குறுகினள் சென்றுழி"

"நீங்கிற் றெறாஉங்
குறுகுங்காற் றண்ணெனுந்
தீ"

"ஆறுங் குறுகா

ரறிவுடையார்”

என்புழிப்போலக் குறுகுதல் அணுகுதல் எனவே பொருள்படும் ஆகலானும், அவ்வாறு அன்றிக் குறைதலே பொருளாயினும் ‘குற்றுயிர்’ ‘குற்றெழுத்து’ என்றாற்போலத் தம்மின் மிக்கிசைக்கும் எழுத்துக்களை நோக்கிக் குறுகும் என்றார் எனவே படும் ஆகலானும், அங்ஙனம் கொள்ளாக்கால்

“எல்லா விறுதியும் உகர நிறையும்”

என்புழிப் புணர்ச்சிக்கண் முற்றுகரமாய் நிற்கும் எனப்

# பொருள்

பட்டு, இச் சூத்திரம் மாறுகொளக் கூறலாய் முடியும் ஆகலானும், குற்றியல் இகரமும் குற்றியல் உகரமும் ஆய்தம்போல வேறு எழுத்தே ஆவன அன்றி, ஒருமாத்திரையாய் நின்ற இகர உகரங்களே மகரக் குறுக்க முதலியனபோல ஒருகாரணம்பற்றி அரைமாத்திரையாய் நின்றன அல்ல என்பது தெற்றென உணர்க.

அற்றேல், ஐகாரக் குறுக்கம் மொழி இடைகடைகள் என்னும் இடம் காரணமாகக் குறுகி இசைப்பது போலக் குற்றியல் இகரக் குற்றியல் உகரங்களும் இடமும் பற்றுக்கோடும் காரணமாகக் குறுகி இசைத்தலின், இவற்றை இயல்பு என்றது என்னை ? எனின், அறியாது கடாயினாய். அவை காரணமாகக்

# தொல்காப்பிய முதற்சூத்திர விருத்தி

[illegible]

குறுகி இசைப்பனவாயின், இங்கு, எது, தாது என்னும் வடமொழி இறுதி உகரமும் அவ்விடமும் பற்றுக்கோடும் உடைமையின் அவை காரணமாகக் குறுகி இசைத்தல்வேண்டும்; காரணம் உள்வழிக் காரியம் உண்டாதல் ஒருதலை ஆகலின். அங்ஙனம் இசையாமையின், இடமும் பற்றுக்கோடும் குற்றியலிகரக் குற்றிய லுகரங்கள் நிற்றற்குச் சார்பு ஆவனவே யன்றிக், குறுகி இசைத்தற்குக் காரணம் ஆகா எனக் கொள்க. அஃதேல், வடமொழியின் அறுவகையிடமும், வல்லெழுத்துப் பற்றுக்கோடும் குற்றியல் உகரத்திற்குச் சார்பு ஆகாமையின் இலக்கண வழுவாம் பிற எனின், ஆகாது; குற்றியல் உகரம் இடமும் பற்றுக்கோடும் சார்ந்து அன்றி நில்லாது என்றது அல்லது இடமும் பற்றுக்கோடும் குற்றியல் உகரத்திற்குச் சார்பாய் அல்லது வாரா என்னும் யாப்புறவு இன்மையின். குற்றியல் உகரம் தமிழ்ச் சிறப்பெழுத்து ஆகலின், வடமொழியின் வாராது ஆயிற்று. இக் குற்றியல் இகரக் குற்றியல் உகர உண்மை அறியாத உரையாசிரியர்,

“இடைப்படிற் குறுகும் இடனுமா ருண்டே”

என்பதற்கு இடைப்படினும் குறுகும் என உம்மையை மாற்றி, இறந்ததுதழீஇற்று ஆக்குவர். அஃது ஆசிரியர் கருத்தொடு முரணும் என்பது இக் கூறியவாற்றான் அறிக. இன்னும் புணர்ச்சி வேற்றுமைபற்றி வேறு ஆயிற்று என்பார்க்குக் களவு, கனவு முதலியவற்று, உகரமும் புணர்ச்சி வேறுபட்டுக் குற்றியல் உகரத்திற்கு உரிய விதி முழுவதூஉம் பெறுதலின், அதனையும் குற்றியல் உகரம் எனக் கோடல்வேண்டும்; அவ்வாறு கொள்ளாமையின், அவர்க்கும் அது கருத்தன்று என மறுக்க.

காட்டு கூட்டு என ஆய் குறைந்து நின்ற ஏவல் வினைச் சொற்களின் வரும் உகரத்தை வினைக்கண் வரும் முற்றுகரம் என்பாரும் உளர். ஆசிரியர்,

"குற்றிய லுகரத் திறுதியு முளப்பட"

எனவே

எடுத்து ஓதினமையானும், புணர்ச்சிக்கண் முற்றுகரத்திற்கு உரிய செய்கை பெருமையானும், அஃது உரையன்று என்க.

இக் குற்றியல் இகரக் குற்றியல் உகரங்களை முற்றியல் இகர உகரங்களின் குறுக்கம் என்றவர் ஆய்தத்தினையும் அவ் வாறு ஒன்றன்குறுக்கம் எனக் கூற மறந்தார்போலும்.

இனிக் குற்றியலுகரம்,

"ஆயிரு மூன்றே
உகரங் குறுகிடன்"[1]

என்பதனன் இடவேற்றுமைபற்றி அறுவகைப்படும் என்றும், நெட்டெழுத்து ஏழும் ஆய்தம் ஒன்றும், உயிர் பன்னிரண்டும், வல்லெழுத்து ஆறும், மெல்லெழுத்து ஆறும், இடையெழுத்து ஆறும் என்னும் அவற்றின் பகுதி முப்பத்தெட்டனுள், இடையெழுத்துக்களுள் வகரம் வல்லெழுத்துக்களோடு தொடராமையானும், உயிரெழுத்துக்களுள், ஔகாரம் மொழியிடை இறுதிகளின் வரப்பெறுமையானும், அவ்விரண்டும் ஒழித்து ஏனை முப்பத்தாறும் இடவேற்றுமைபற்றிய விரியாம் என்றும் கூறுவாரும் உளர்.

இனி, நாகு, காசு என்புழியும், நீடாது குறுகாது என்புழியும் நெட்டெயிர் இறுதிக் குற்றுகரமே ஆகவும், நாகு என்பதனை நெடில் இறுதிக் குற்றுகரம் எனவும் நீடாது என்பதனை உயிர்த் தொடர் மொழிக் குற்றுகரம் எனவும் ஆசிரியர் கொண்டது, ஈரெழுத் தொருமொழி எனவும் இரண்டனை இறந்த தொடர் மொழி எனவும் பகுத்துணர்ந்து கோடற்பொருட்டு ஆயினும், எழுத்தான் வேறுபாடு இன்மையின், அவ்வாறு ஆணையாற் கொள்ளாது, ஆசிரியர், ஈற்றயலின் நின்ற எழுத்தை இடமாகக் கொண்டாற்போல ஈற்றயலில் நின்ற அசையை இடமாகக் கொண்டு, அவற்றுள், அது இது முதலிய முற்றுகரத்தை நீக்குதற்குக் குற்றெழுத்துத் தனியே வரும் அசை ஒன்றனையும் ஒழித்து, ஏனை ஏழசையினையும்,

"நெடிலே
குறிலிணை குறிநெடில்
என்றிவை
ஒற்றொடு
வருதலொடு குற்றொற்
றிறுதியென்று
எழ்குற்
றுகரக்(கு) இடனென

மொழிப''

என்பதோர் சூத்திரம்பற்றி ஏழிடம் எனக் கோடும் என்பார்க்குப் பிண்ணாக்குச், சுண்ணாம்பு, பட்டாங்கு, விளையாட்டு, இரும்பூது முதலியனவும், ஆய்தத் தொடர்ந்தனவும், நெட்டொற்று இறுதி, நெடில் இறுதிக் குற்றுகர முதலியனவும், குற்றொற்று இறுதிக் குற்றுகரமுமாய் அடங்குமேனும், போவது வருவது, ஒன்பது முதலியன அடங்காமை யறிக. நெடில் முதலாயின, ஈற்றயலில் நிற்றல்வேண்டும் என யாப்புறவு இன்மையின், முதற்கண் நிற்பி

1. தொல். எழுத்து. குற்றியலுகரப் புணரியல் சூ. க.



னும் ஈற்று உகரம் அவற்றிறுதி ஆதல் அமையும் எனக்கொண்டு, போவது முதலியனவும், நெடில் இறுதி முதலியனவாய் அடங்கும் என்பார்க்கும், அங்ஙனம் பாகுபடுத்துக் கருவி செய்ததனாற் போந்த பயன் இன்று என்பது.

இனி, இம் மூன்றுமே அன்றி உயிர்மெய் முதலியவற்றையும் சார்பெழுத்து என்பாரும் உளராலோ எனின், ஆல் என்புழி உயிர் முன்னும், மெய் பின்னும் நின்று மயங்கினாற்போல, லா என்புழியும், மெய் முன்னும் உயிர் பின்னும் நின்று மயங்கினவே அல்லது, உயிரும் மெய்யும் ஆகிய தம் தன்மை திரிந்து வேறு ஆகாமைக்கு,

"மெய்யோ

டியையினும் உயிரியல்

திரியா"[1]

என்றற் ரெடுக்கத்துச் சூத்திரங்களே சான்று ஆகலான், உயிர் மெய் ஆகிய காலத்தும் குறின்மை நெடின்மை என்னும் உயிர்த் தன்மையும், வன்மை மென்மை இடைமை என்னு மெய்த்தன்மை யும் தம் இயல்பிற் றிரிவு படாமையானும், உடன்மேல் உயிர்வந் தொன்றுதல் பொன்மணிபோல இயல்பு புணர்ச்சியே ஆம் என்ப ஆகலானும், ஒற்றுமை நயத்தான் உயிர்மெய் என்பதனைத் தகர ஞாழல் போல உம்மைத்தொகை நிலைக்களத்துப்பிறந்த அன்மொழித்தொகை என்பார்க்குத், தகரமும் ஞாழலுங் கூடிய சாந்து பின்னர்த் தகரமு ஞாழலும் ஆகாதவாறுபோல, மெய் உயிர் நீங்கிற் றன்னுரு ஆதல் பொருந்தாமையானும், 'துணங்கை' என்பது மெய்ம்முதல் உயிர் ஈறு மெய்ம்மயக்கம் எனவும், வரகு என்பது உயிர்த்தொடர்மொழிக் குற்றியல் உகரம் எனவும் கொள்வதன்றி, உயிர்மெய் முதல், உயிர் மெய்யீறு, உயிர்மெய் மயக்கம், உயிர்மெய்த் தொடர்மொழிக் குற்றியல் உகரம் எனக் கொள்ளாமையின், ஒற்றுமைநயம்பற்றி ஒன்று என்பதனுல் ஒரு பயன் இன்மையானும், மெய்கள் எல்லாம் உயிர்வந்து ஒன்ருது, தனித்து நின்றவழியே மாத்திரை கொள்ளவும் எழுத் தெண்ண வும் படும் என்பது அவற்று இயல்பாகலின், அதுபற்றி ஒன்று எனல் வேண்டாமையானும், அவ்வியல்பு அறிந்துகோடற்குத் தனித்து நின்ற மெய்யை ஒற்று எனவும், புள்ளி எனவும் உயி ரோடு கூடிய மெய்யை உயிர்மெய் எனவும் சிறப்புப்பெயர் இட்டு ஆளுதல் ஆசிரியர் கருத்தாகலானும், உயிரோடு கூடிய இடத்து வரிவடிவு வேறுபடுதலின், அதுபற்றிப்,

1. தொல். எழுத்து. நான்மரபு. சூ. ௪௦.

முதற்சூத்திர விருத்தி

"புள்ளி யில்லா எல்லா
மெய்யும்"
(தொல். எழுத்து. நூன்மரபு,
கஎ)

என மெய்மேல் வைத்துச்
சூத்திரம் செய்து வடிவு
எழுத்து இலக்கணம் கூறினர்
அன்றி, ஒலி எழுத்து
இலக்கணம் வேறு
படக் கூறுமையானும், அளபெடை சார்பு எழுத்து என வேறு
காமை முன்னர்க் காட்டப்பட்டது ஆகலானும், ஐகாரக் குறுக்க
முதலியன ஒரு
காரணம்பற்றிக் குறுகின

ஆகலிற் சிறுமரம்
பெருத்தழியும் பெருமரம்
சிறுத்தழியும் வேறொரு மரம்
ஆகாத வாறுபோல
வேறு எழுத்து எனப்படா
ஆகலானும், வடநூலாரும்
வடவெழுத்துள்
உயிரெழுத்தின் இறுதிக்கண்
வைத்த இரண்டும்,
ஒற்றெழுத்தின் இறுதிக்கண்
வைத்த இரண்டும் ஆகிய
நான்கு எழுத்தும்
வல்லெழுத்தின்முன்
மெல்லெழுத்து வந்து
மயங்குழி அவ்வவ்

வல்லெழுத்தோடு ஒப்ப இடையே தோன்றும் எனப் பட்ட வியம எழுத்தும் என்னும் இவை மாத்திரையே சார்பு எழுத்து என வேறு கோடலன்றி, உயிர்மெய், உயிரளபெடை,

ஐகாரக் குறுக்கம் முதலிய எழுத்துக்களைச் சிறிது திரிந்தமை பற்றி வேறு எழுத்து என யாண்டும் கொள்ளாமையானும், அது பொருந்தாது என மறுக்க. வன்றொடர்மொழிக் குற்றியலுகரம் வல்லெழுத்து வருவழிக் கால் மாத்திரையாய்க் குறுகுதலின், அதுபற்றி அதனைக் குற்றியல் உகரத்தின் வேறு என்னுமையின், அவர்க்கும் அது கருத்து அன்றுபோலும் என்க.

இன்னும் அவர் ஐகாரம், மொழிமுதற்கண்ணும் குறுகும் எனவும், கை, பை முதலியனவும் பொருளைச் சுட்டியவழிக் குறுகும் எனவும் கூறினர். இடையன், மடையன், தினை, பனை என்புழிக் குறுகுதல்போல "வைகலும் வைகல் வரக் கண்டும்" என்புழி ஐகாரம் முதற்கண் குறுகாமை செவி கருவியாக உணரப்படுதலானும், அன்றியும் "வைகலும் வைகல்" என்புழிக் குறுகுமாயின் வைகல் என்பதனைக் குறிலிணை ஒற்று என்று அசைத்தல் வேண்டும்; வேண்டவே, வெண்டளை சிதைதலானும்,

"மொழிப்படுத் திசைப்பினும் தெரிந்துவே றிசைப்பினும்

எழுத்தியல் திரியா
என்மனார் புலவர்"
(தொல். எழுத்து. மொழி. ௨௦)

என எல்லா எழுத்திற்கும் பொதுப்படக் கூறிய விதியோடு முரணி, ஐகாரம் தெரிந்து வேறு இசைத்தற்கண் திரியாது எனவும், மொழிப்படுத்து இசைப்பின் யாண்டு வரினும் திரியும் எனவும் கூறுதல் பொருந்தாமையானும்,

## தொல்காப்பிய

## முதற்சூத்திர விருத்தி

௪௫

"ஓரள பாகும்
இடனுமா ருண்டே"[1]

என்ற உம்மையான் ஓரளபு ஆகா இடனுமா ருண்டு என்பது தானே பெறப்படுதலானும், ஈண்டு இடமாவது, மொழி முதல்

இடை கடை என

மூன்றே அன்றி வேறு இன்மையானும்,

ஜகாரம் மொழி முதற்கண் குறுகாது எனவே கொள்க. ஈண்டுக் காட்டிய ஏதுக்களானும், ஆசிரியர் ஓதாமையானும், பிறரும்,

"குறுகிய மூவுயிர்"[2]

என்றே மொழிதலானும், ஔகாரக்குறுக்கம் என ஒன்று இன்மை உணர்க. இஃது உரையாசிரியர் உரையானும் அறிக. எழுத்

தின் குறுக்கமாவது ஓதிய முயற்சியின் மெலிதாக உச்சரித்தல். வடநூலாரும் இலகூச்சாரணம் என்பர்.

சூத்திரப் பொருள்நிலை ஒருவகையான் முடிந்தது.

---

# இனிச் சொன்முடிபு ஆமாறு :

## ' எழுத்து '

'எழுதப்படுவது' என்னும் பொருட்கண் எழுத்து என்னும் முதனிலை உரிச்சொல்லின் முன்னர்ச் செயப்படு பொருண்மை உணர்த்தும் ஐகார விகுதி புணர்ந்து,

"செய்யா என்னு முன்னிலை வினைச்சொல்"[3]

என்னுஞ் சூத்திரத்து 'மொழிந்த பொருளோ டொன்ற அவ் வயின்

மொழியா ததனை முட்டின்று முடித்தல்’ என்னும் உத்தி யால் அவ் ஐகாரம் கெட்டுக் கெட்டவழித் தகரம் இரட்டித்து, எழுத்து என முடிந்தது.

இவ்வாறு அன்றி எழுத்து என்னும் முதனிலை எழுத்து எனத் தானே திரிந்து நின்றது என்றும், அஃது ஆகுபெயராற் செயப் படுபொருளை உணர்த்திற்று என்றும் கூறுவாரும் உளர். அது

பொருந்தாது. ஒரு காரணம் இன்றித் திரிதல் கூடாமையானும், நட வா கரு செ முதலிய முதனிலை எல்லாம் விகுதியோடு அன்

1. தொல். எழுத்து. மொழிமரபு, சூ. உச.
2. யாப்பருங்கலக்காரிகை உறுப்பியல், சூ. க.

3. தொல். சொல். எச்ச இயல், சூ. ருச. சச



றித் தனித்து இயங்கல் ஆற்றாமையானும், இம் முதனிலைகள் உரிச்சொல் ஆகலிற் பெயர்த்தன்மைப்பட்டுழி அல்லது ஆகு பெயராதற்கு ஏலாமையானும் என்பது. அஃதேல், நட வா உண் தின் என்றற் றொடக்கத்து முதனிலைகளே விகுதியொடு புணராது, தனித்து நின்று ஓசை வேறுபாட்டான் முன்னிலை யேவல் ஒருமை எதிர்கால வினை முற்றுப் பொருண்மை உணர்த் தினவாலோ எனின்: அற்றன்று; நடவாய் வாராய் உண்ணாய் தின்னாய் என்றற் றொடக்கத்து முன்னிலை ஏவல் ஒருமை எதிர் கால வினைமுற்றுச் சொற்கள்,

“செய்யா யென்னு முன்னிலை வினைச்சொல்
செய்யென் கிளவி ஆகிட னுடைத்தே”[1]

என்னுஞ் சூத்திரத்தால் ஆய் என்னும் விகுதி குன்றி, நட வா

உண் தின் என்றற்

றொடக்கத்தனவாய் நின்றன

அல்லது, முதனிலைகளே

ஓசைவேறுபாட்டான்

அவ்வாறு நின்றன என்பது

படாமையின். அது,

"செய்யா யென்னு

முன்னிலை வினைச்சொல்"[1]

என்னுஞ் சூத்திரத்திற்

சேனாவரையர் கடா

விடைகளான் விளங்கக்

கூறியவாற்றானும் அறிக.

இனி உரையாசிரியர்

முதலியோர் செய்யாய் என்னும் எதிர்மறை வினைச்சொல்லே செய் என்னும் பொருளும் தரும் என்பது இச்சூத்திரத்திற்குப் பொருளாக உரைத்தார். அஃது ஆசிரியர் கருத்தாயின்,

“செய்யா வென்னும் எதிர்மறை வினைச்சொற் செய்யென் பொருளும் தருமிட னுடைத்தே” எனச் சூத்திரஞ் செய்வர். அவ்வாறு அன்றி,

“முன்னிலை வினைச்சொற் செய்யென் கிளவி

ஆகிட னுடைத்து" எனச் சொல்லே பற்றிச் சூத்திரம் செய்தலானும், அன்றிச் செய்

யாய் என்னும் எதிர்மறை வினைச்சொல்லே செய் என் பொருளும் தரும் என்பது கருத்தாயின், செய்யீர் என்பதும் செய்யும் என்னும் ஏவற்பொருள்பட வருதலிற்,

---

1. தொல். சொல். எச்ச இயல், சூ. ருச.



"செய்யீ ரென்னு முன்னிலை வினைச்சொலும்
செய்யுமென் கிளவி
ஆகிட னுடைத்தே"

எனச் சூத்திரம் செய்யாமை குன்றக் கூறலாய் முடியும் ஆக லானும், இரண்டும் வடிவான் ஒப்பினும், செய்யாய், செய்யீர் என்னும் ஏவல் வினைச்சொற்கள் முதனிலையும் ஈறுமாய்ப் பகுக்கப்பட்டு நிற்றலும், செய்யாய் செய்யீர் என்னும் எதிர்மறை வினைச்சொற்கள் முதனிலையும் ஈறுமாய்ப் பகுக்கப்பட்டு, எதிர்மறையுணர்த்தும் ஆகார இடைநிலை கெட்டு நிற்றலும் ஆகிய வேறுபாடு உடைமையானும், அவ்வுரை போலி உரை என்க. செய்கிலன், செய்யலன் என்புழிப்போலச் செய்யாய் என்புழியும்

எதிர்மறைப்பொருள் உணர்த்துதற்கு ஓர் இடைநிலை உண்டு எனக் கொள்க. அஃது ஆகாரம் ஆதல், செய்யாது, செய்யாத, தெருளாதான், அருளாதான் என மெய்ம் முதலாகிய விகுதியொடு புணரும் சொற்களிற் கண்டுகொள்க. செய்யான், செய்யேன், செய்யாய் என உயிர் முதலாகிய விகுதி புணர்வழி அவ்வாகாரஞ் சந்திநோக்கிக் குன்றியதேயாம் என்பது. வீரவஞ்சி ஒரு மொழி இலக்கணம் கூறுதொழிந்த ஆசிரியர்,

"செய்யா யென்னு முன்னிலை வினைச்சொல்"

எனச் சூத்திரம் செய்தது இந்நிகரனவாய் வருவன எல்லாம் அவ்வவ் வேறுபாடு உணர்ந்து இலக்கியம் கண்டதற்கு இலக்கண மாக முடித்துக்கொள்ளப்படும் என்று உய்த்துணர்ந்து கோடற் பொருட்டேயாம் ஆகலானும்,

"சொல்வரைந் தறியப் பிரித்தனர் காட்டல்"

என முடிவின்கண் ஆணை தந்தமையானும், சேனாவரையரும் இவ்வாறே தொல்காப்பியம் முதலிய சில மொழிகளை ஆண்டாண்டுப் பிரித்துப் புணர்த்துச் செய்கை செய்து முடித்தார் ஆகலானும், இன்னோரன்னவை எல்லாம் இவ்வாறே முடிக்கும் இயல்பு அறிந்து முடித்துக்கொள்க என்பது தொல்லாசிரியர் துணிபு என உணர்க. வடமொழியுள்ளும் ஆசிரியர் பாணினியார் எட்டு

அத்தியாயத்துள், விகுதி மாத்திரைக்கே மூன்றத்தியாயங் கூறி, விகுதிப் புணர்ச்சிக்கட்படும் செய்கை முதலி யனவும் வேறு கூறினர். அவற்றுள்ளும் அடங்காது எஞ்சி நின்ற சொற்களைப் பின்னுள்ளோர் இலக்கியம் கண்டதற்கு இலக்கணமாகவே ஏற்ற பெற்றி அறிந்து புணர்த்துச் செய்கை செய்து முடித்துக் காட்டியவாறும் அறிக.

ஊண், தீன், கோள் என்றாற்போல்வனவும் செயப்படு பொருண்மை உணர்த்தும் ஐகார விகுதி புணர்ந்து கெட்டு,

முதல் நீண்டு நின்றன. 'திரை, நுரை, அலை, தளிர், பூ, காய், கனி என்றாற்போல்வன வினைமுதற் பொருண்மை உணர்த்தும் இகர விகுதி புணர்ந்து கெட்டு நின்றன. "கெடுவாக வையாது" என்புழிக் கெடுவென்பது புடைபெயர்ச்சியை உணர்த்தும் தல் விகுதி கெட்டு நின்றது. கேடு என்பது அவ்வாறு ஆய், முதல் நீண்டு நின்றது எனக் கொள்க. ஏனையவும் இவ்வாறே ஏற்ற பெற்றி அறிந்து முடித்துக்கொள்க. திரை, நுரை, அலை, தளிர் என்றாற்போல்வன விகுதி குன்றி முதல்நிலை மாத்திரையாய் நிற்றல்பற்றி, இவற்றை முதனிலை வினைப்பெயர் என

வழங்குப. ஐகார விகுதி செயப்படு பொருண்மை உணர்த்துதல், நடவை, சேக்கை, உடுக்கை, தொடை, விடை என்றாற்போல்வனவற்றுள்ளும், இகர விகுதி வினைமுதற் பொருண்மை உணர்த்துதல், சேர்ந்தாரைக்கொல்லி, நூற்றுவரைக்கொல்லி, நாளோதி, நூலோதி என்றாற்போல்வனவற்றுள்ளும் காண்க. இவ்விகுதிகள் சிறுபான்மை பிற பொருள் உணர்த்தியும் வரும். வடநூலாரும் வினைப்பெயர் விகுதிகள் கூறிய நியமம் தப்பிப் பிற பொருள் உணர்த்தியும் வரும் எனக் கொள்வர். உடுக்கை என்பது உடுக்கப்படும் பொருளை உணர்த்துங்கால் ஐகார விகுதித்து என்றும், உடுத்தல் எனப் புடைபெயர்ச்சியை உணர்த்துங்கால் கை விகுதித்து என்றும் தெரிந்து உணர்ந்துகொள்க.

அற்றேல், இவ்வொரு மொழி முடிபு இலக்கணம் ஆசிரியர் கூறாமை குன்றக்கூறல் ஆம் பிற எனின், இந்திரனுக்குப் பிருகற்பதி இவை வழு; இவை வழுவில்லன என வடமொழிகளைத் தனித்தனி எடுத்து ஓதலுற்றார்க்குத் தெய்வ யாண்டில் ஆயிரம் யாண்டு சென்றது; சென்றும் சொற்கள் முடிந்தில என மாபாடியத்துள் ஆசிரியர் பதஞ்சலியார் எடுத்தோதினார். தமிழ்மொழியும் அவ்வாறு பெருகிக்கிடத்தலின், அவற்றை இவை வழு; இவை வழுவில்லன எனத் தனித்தனி எடுத்து ஓதப்புகின், முடிவு பெறாது. ஆசிரியர்க்கு ஒருவாற்றான் முடிவு பெறினும், சின்னாட் பல்பிணிச் சிற்றறிவினோர் அவற்றைக் கற்பதற்கே ஆயுள் போதாவாம். ஆகவே, அவற்றைக் கற்றுப், பலருடன் பயின்று, பிறர்க்கு உரைத்துக், கல்வி நிரம்புமாறு இல்லை ஆகலான், அவ்வாறு கூறாது, சிலவற்றைப் பொதுவிதியானும், சிலவற்றைச் சிறப்புவிதியானும், சிலவற்றை எடுத்தோத்தானும்,

சிலவற்றை இலேசானும், சிலவற்றைப் புறனடையானும், சில வற்றை உத்திவகையானும் உணர்ந்துகொள்ளுமாறு தொகுத்து நூல் செய்தார் ஆசிரியர் ஆகலின், ஆகாது[1] என்க.

அற்றேல் அஃது ஆக; நட வா முதலிய முதனிலைகளை உரிச்சொல் என்றது என்னை? நடத்தலைச் செய்தான் என உருபு ஏற்று நிற்றலின் பெயர்ச்சொல்லேயாம்; அஃது அல்லாக் கால் வினை உணர்த்துதலின், வினைச்சொல் எனப்படுமாலோ எனின், அறியாது கடாயினாய். என்னை? "எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே" ஆக, அவற்றைப் பெயர் வினை இடை உரி எனப் பாகுபாடு செய்தது, உயர்திணை அஃறிணை என்றற் றொடக்கத்தன போலப் பொருள் வேறுபாடுபற்றிக் கருவிசெய் தற்பொருட் டன்றே? அவற்றுட் குறிப்பும் பண்பும் இசையும் பற்றி வருவன எல்லாம் ஒரு நிகரனவாக, அவற்றுட் சிலவற்றை உரிச்சொல் எனவும் சிலவற்றை வேறு சொல் எனவும் கோடல் பொருந்தாமையின், குறிப்பும் பண்பும் இசையும், குணப்பண் பும் தொழிற்பண்பும் என இரண்டாய் அடங்கும். பொருள் இடம் காலம் சினை என்னும் நான்கும் பொருள் என ஒன்றாய் அடங்கும். தொழிற்பண்பு வினை முதலிய காரகங்களாற் புடை பெயருங்கால் அது வினை எனப்படும். இங்ஙனம் ஆகலின் பொருளை உணர்த்தும் சொல் பெயர்ச்சொல் எனவும், குணப் பண்பும் தொழிற்பண்பும் ஆகிய பொருட்பண்பை உணர்த்தும் சொல் உரிச்சொல் எனவும், பொருட்புடைபெயர்ச்சி ஆகிய தொழிற்பண்பின் காரியத்தை உணர்த்தும் சொல் வினைச்

சொல் எனவும், பொருளையும் பொருளது புடைபெயர்ச்சியையும் தம்மானன்றித் தத்தம் குறிப்பான் உணர்த்தும் சொல் இடைச்சொல் எனவும் பகுக்கப்பட்டன. எல்லாம் பொருள் என்றற்கு ஒரோவழி உரிமை உடைமையின், அதுபற்றிப் பண்பும் தொழிலும் பொருள் எனவும் படும் ஆகலின், அவற்றை உணர்த்தும் உரிச்சொல்லும் ஒரோவழிப் பெயர்ச்சொல் எனப்படும்; இடைச்சொல்லும் ஒருவாற்றாற் பெயரே ஆம். இக் *கருத்தேபற்றி அன்றே? ஆசிரியர்,*

*"சொல்லெனப் படுப பெயரே வினையென்(று)*
*ஆயிரண் டென்ப அறிந்திசி னோரே"*[2]

எனவும்,

1. ஆகாது – குன்றக்கூறல் ஆகாது.

2. தொல். சொல். பெயரியல். சூ. ௪.



*"இடைச்சொற் கிளவியும் உரிச்சொற் கிளவியும்*
*அவற்றுவழி மருங்கில் தோன்று மென்ப"*[1]

எனவும் இவ்வாறு சூத்திரம் செய்தனூஉம் எனக் கொள்க.

பெயர், பொருள் என்பன ஒருபொருட்கிளவி ஆகலின், பொருளை உணர்த்தும் சொல் பெயர்ச்சொல் எனப்பட்டது. பொருட்குப் பண்பு உரிமை பூண்டு நிற்றலின், அதனை உணர்த்தும் சொல் உரிச்சொல் எனப்பட்டது. வினை என்பது பல பொருள் ஒரு சொல்லாய்த் தொழிற்பண்பினையும் அதன் காரியம் ஆகிய வினைநிகழ்ச்சியையும் உணர்த்தும். அவற்றுள், தொழிற் பண்பை உணர்த்தும் சொல் உரிச்சொல் என அடங்கினமை யின், ஏனைக் காரியம் ஆகிய புடைபெயர்ச்சி வினையை உணர்த்தும் சொல் வினைச்சொல் எனப்பட்டது. பொருளையும் பொருளது புடைபெயர்ச்சியையும் தம்மானன்றித் தத்தம் குறிப்பான் உணர்த்துஞ் சொற்கள் பெயர்ச்சொல் வினைச்சொற்களும் ஆகாது, அவற்றின் வேறுமாகாது இடைநிகரனவாய் நிற்றலின், இடைச்சொல் எனப்பட்டன. இது பாலைத்திணையை நடுவு நிலைத்திணை என்றதுபோலக் கொள்க.

பொருட்புடை பெயர்ச்சி ஆவது பொருட்பண்பின் புடை பெயர்ச்சி எனவே கொள்க. புடைபெயர்ச்சி எனினும், வினை நிகழ்ச்சி எனினும் ஒக்கும். இந்நால்வகைச் சொற்களுள்ளும் பண்பு உணர்த்துவன ஆகிய உரிச்சொற்கள் பல என்க. அற்று ஆகலின் அன்றே? ஆசிரியர்,

"வெளிப்படு

சொல்லே கிளத்தல்

வேண்டா

வெளிப்பட வாரா
உரிச்சொன் மேன''
(தொல். உரி, உ.)

எனச் சிலவற்றை எடுத்தோதி, இவ்வாறு வருவனவும் பல உள ; அவை எல்லாம் ஈண்டுக் கூறப்புகின் முடிவு பெறு என்னும் கருத்தால்,

> ''பன்முறை யானும் பரந்தன வரூஉம்
> உரிச்சொல் லெல்லாம்''
>
> (தொல். உரி. க00)

எனவும்,

---

1. தொல். சொல். பெயரியல், கு. ரு.

“இனைத்தென வறியும்
வரம்புதமக் கின்மையின்”

(தொல். உரி. ௧00)

எனவும்,

“கிளந்தவற் றியலாற்
பாங்குற வுணர்தல்”

(தொல். உரி. ௧00)

எனவும் கூறியொழிந்தார் என்பது. இடைச்சொற்கு இவ்வாறு கூறுமையும் அறிக. இப்பெற்றி அறியாதார்

தத்தமக்கு வேண் டியவாறே கூறுப.

நட வா முதலிய முதனிலைகளும் தொழிற்பண்பை உணர்த்தும் சொற்கள் ஆகலின், உரிச்சொல்லே ஆம் எனவுணர்க. அஃதேல், நடந்தான் என்புழி நடத்தலைச் செய்தான் என உருபு விரிந்தவாறு என்னை ? எனின், அற்றன்று ; நடந்தான் என்பதொரு மொழித்தன்மைப்பட்டு

நிற்றலின். அது நட வைத்தான் எனத் தன் சொல்லாற் பிரித்துக் காட்டப்படாமை யின், நடத்தலைச் செய்தான் எனப் பிறசொல்லாற் காட்டி

முடிக்கப்படும். நட என்பது தல் என்னும் பகுதிப்பொருள் விகுதி பெற்றவழிப் பெயர்ச்சொல்லாம் ஆகலின், ஆண்டு உருபு ஏற்றல் அமையும் என்க. வடநூலாரும் பிரியாத் தொகையைப் பிற சொல்லாற் பிரித்துக் காட்டுக என்பர். இன்னும் விரிப்பிற் பெருகும் ஆகலான் அமைக.

# நடுவு நிலைத்திணை

அற்றேல், அஃது அங்ஙனம் ஆக; பாலைத்திணை நடுவு நிலைத்திணை என்று ஆயவாறு என்னை? எனிற் கூறுதும். ஆசிரியர் யாதானும் ஓர் காரணம்பற்றியே குறியிட்டாளுவது அல்லது வடநூலார்போலக் காரணம்பற்றாதும் குறியிட்டு ஆளுதல் யாண்டும் இன்மையானும், ஆட்சி நோக்கிய குறி எனிற் குறியீடு எல்லாம் ஆட்சிப்பொருட்டே ஆகலின், ஆட்சி நோக்கிக் குறியீடு; குறியீடு நோக்கி ஆட்சி என ஒன்றனை ஒன்று பற்றுதல்

என்னும் குற்றமாம் ஆகலின், ஆட்சி நோக்கிய குறி என்பது பொருந்தாமையானும்,

"நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு

முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே"

(தொல். பொ. அகம். க)

என்புழி நடுவுநிலைத்திணை என்னும் சொல்லே தன்காரணம்

இனிது விளக்கி நிற்றலானும், அது நடுவு நிற்றல் காரணத்தாற் பெற்ற பெயர் என்பது பெற்ரும். ஏனை நாற்றிணையும் முறை யானே கூறி இறுதிக்கண் ஓதுதலான் இஃது அவற்றின் வேறு என்பது விளங்குதலானும், எஞ்சி நின்றது பாலையே ஆகலானும், புறப்பொருள் கூறுங்கால்

"வாகை தானே பாலையது புறனே"

(தொல். பொருள். புறத். கஅ)

என நடுவுநிலைத்திணை கூறும் தானத்திற் பாலை எனக் குறியிட்டு ஆளுதலானும், பாலைத்திணை நடுவுநிலைத்திணை என்பன ஒரு பொருட்கிளவி என்பதூஉம் பெறப்பட்டது. படவே, அஃது எவற்றின் நடுவு நிற்பது என்று அவாவுங்கால், எண்ணும் முறைமைக்கண் நடுவு நிற்பது என்றல் பொருந்தாது; முதற் பொருள் முறைபற்றி முல்லை முதலாக வைத்து எண்ணினர்; உரிப் பொருள் முறைபற்றியும் புறப்பொருள் முறைபற்றியும் குறிஞ்சி முதலாக வைத்து எண்ணப்படும், அம்மூக்கூற்று எண்ணும் முறைமையினும் பாலைத்திணை நடுவு நிற்பது அன்றாகலின். இனி, ஏனை நால்வகை உரிப்பொருள்களினும் இடை இடையே பிரிவு நிகழ்தலின், அதுபற்றி நடுவுநிலைத்திணை என்றார் எனின், புணர்ச்சியும் அவ்வாறு, இடை இடை நிகழ்தல்பற்றிக் குறிஞ்சியும் நடுவுநிலைத்திணை எனல் வேண்டும் ஆகலானும், நடுவண தாகிய நண்பகற்காலம் தனக்குக் காலம் ஆதல்பற்றி அங்ஙனம் கூறினர் எனின், நடுவணது ஆகிய இடை யாமம் தனக்குக் காலம் ஆதல்பற்றிக் குறிஞ்சியும் அவ்வாறு கூறப்படும் ஆக லானும், புணர்தற்கும் இருத்தற்கும் இடையே பிரிவு வைத்தல் பற்றிக் கூறினர் எனின், இருத்தல் இரங்கலும் அவ்வாறு ஆகலின், அதுபற்றி முல்லை நெய்தல்களும் அவ்வாறு கூறப் படும் ஆகலானும், உலகியற்பொருள் ஆகிய அறம் பொருள் இன் பங்களுள், நடுவணது ஆகிய பொருட்குத் தான் காரணம் ஆதல் பற்றி அங்ஙனம் கூறினர் எனின், பரத்தையிற் பிரிவு ஓதற் பிரிவு போல்வன ஏனையவற்றிற்கும் காரணம் ஆகலிற் பொருள் மாத்திரைக்கே காரணம் என்பது படாமையானும், அங்ஙனம் உரைப்பன எல்லாம் போலி என்று ஒழிக. மற்றென்னையோ? காரணம்பற்றிக் குறியிட்டவாறு எனின்,

"நடுவ ணைந்திணை நடுவண தொழியப்
படுதிரை வையம் பாத்திய பண்பே"

(தொல். பொருள். அகம். ௨)

என நிலம் பகுத்து ஓதுங்கால் நடுவணது எனக் குறியிட்டார். ஆகவின், அங்ஙனம் பதுக்கப்படும் நிலங்களும் ஆகாது, அவற்றின் வேறும் ஆகாது தனக்கு உரிய நிலம் நடு நிகர்த்ததாய் நிற்றல்பற்றி நடுவுநிலைத்திணை எனக் குறியிட்டு ஆளுதலே ஆசிரியர் கருத்து என்க. அங்ஙனம் ஆதல்,

"முல்லையுங் குறிஞ்சியும் முறைமையிற் றிரிந்து
நல்லியல் பழிந்து நடுங்குதுய ருறுத்துப்
பாலை யென்பதோர் படிவங் கொள்ளும்"

(சிலப். காடுகாண் கா. அடி. ௬௪ - ௬௬)

என்பதனான் உணர்க. இங்ஙனம் குறியிட்டமையிற் பாலைக்கு நிலம் உண்டு என்பதூஉம், அதனை ஏனை நிலங்களின் வேறு ஆக வைத்துப் பகுத்து எண்ணுதல் மரபு அன்று என்பதூஉம் ஆசிரியர் கருத்தாதல் உணர்ந்துகொள்க. இவ்வுண்மை உணராதார் பாலை சான்ற சுரம் நானிலத்துள் அடங்காது என வேறு வைத்து எண்ணி, ஆசிரியரோடு மாறுகொண்டு, நிலம் ஐந்து எனத் தமக்கு வேண்டியவாறே கூறுப.

அஃது அங்ஙனம் ஆக; முல்லை முதல் ஆக வைத்து எண்ணியது முதற் பொருள் முறைபற்றி என்றதென்னை? காடுறை உலகம் முதல் வைத்து எண்ணுதலின் நிலமுதற்பொருள் கூறியதே; நிலமுறைபற்றி யன்று. இனிக் காலமுதற்பொருள் இரண்டனுள் பெரும்பொழுது ஞாயிற்றிற்குரிய சிங்கவோரை முதல் வைத்து எண்ணுதல் முறை ஆயினும் திணைகள் ஒன்றும் பலவும் பெரும்பொழுது பெறுதலின், அம் முறைபற்றி முறை கோடல் பொருத்தம் அன்று. சிறுபொழுது காமத்திற்குச் சிறந்த இராக்காலத்தின் முற்கூறு முதல் வைத்து எண்ணியது முறை ஆயினும், எற்பாடு ஆகிய பின்பகலை இறுதிக்கண் வையாமையின், அதுவும் முறைபற்றிக் கூறியது அன்று. இங்ஙனம் ஆகலானும், வேறு காரணம் இன்மையானும், தலைவன் பிரிந்துழித் தலைவி ஆற்றி இருத்தல் கற்பு ஆகலின், இல்லறத்திற்குக் கற்புச் சிறந்தமைபற்றி முல்லை முதல் வைத்து எண்ணினார் எனவே கோடும் எனின், அறு பொருந்தாது; ஏனைத் திணைகள்

# முதற்சூத்திர விருத்தி

அவ்வாற்றான் முறை பெருமையானும், கந்தருவ வழக்கிற் கற்பினும் களவு சிறந்தது ஆகலானும் என்பது.

இனி, நிலம்பற்றியும் பெரும்பொழுது பற்றியும் முறை கோடல் சாலாது ஆயினும், சிறுபொழுதுபற்றி முறை கோடல் சாலும் என்க. ஆண்டு எற்பாடு என்றது நாள் வெயிற்காலையே ஆம். படுதல் உண்டாதல் என்னும்பொருட்டு. இப்பொருள் காணாதார் எற்பாடு பின்பகல் என மயங்கிக் கூறுப.

"இலமென் கிளவிக்குப்
படுவரு காலை"

(தொல். எழு. புள்ளிமய. ௨௧)

"இலம்பா டொற்கமா
யிரண்டும் வறுமை"

(தொல். உரி. ௬௪)

என்னும் சூத்திரங்களின் நச்சினார்க்கினியாரும் படுதல் உண்டாதல் என்று உரைத்தவாறு காண்க. எனவே, எற்பாடு என்றது ஞாயிற்றின் உதயம் என்றவாறு ஆயிற்று. தலைவன் பிரிந்

தழித் தனித்திருந்த தலைவி இராக்காலம் முழுவதும் கொன்னே கழிந்தமைபற்றி இரங்குதற்கு உரிய காலம் அது ஆம் என்பார்,

"எற்பாடு
நெய்தலாதன் மெய்பெறத்
தோன்றும்"
(தொல். பொரு. அகம். அ)

என்றூர். இனி இவ்வாறு அன்றி, வைகுறு விடியல் என்னும் வினைத்தொகையை வைகுறுவும் விடியலும் என உம்மைத்
தொகை ஆக்கி,
வைகறையை வைகுறு
எனவும், நாள்வெயிற்
காலையை விடியல் எனவும் கொண்டு, இவ்விரண்டும் மருதத் திணைக்கு உரியன என்றும், பின்பகலை எற்பாடு எனக் கொண்டு, அது நெய்தற்கு உரித்து என்றும், இங்ஙனம் சிறுபொழுது அறுவகைப்படும் என்றும் உரைப்பாரும் உளர்.

"காலையும் பகலும் கையறு
மாலையும்

ஊர்துஞ் சியாமமும்
விடியலு மென்றிப்
பொழுதிடை தெரியிற்
பொய்யே காமம்''
(குறுங். செ. ௩௨)

என்னும் குறுந்தொகைப்பாட்டினுட் கொண்டமையானும், பகல் எனவே

சிறுபொழுது ஐந்தே
பின்பகலும் அடங்கும்

தொல்காப்பிய

முதற்சூத்திர விருத்தி

எனின், அதுபற்றி முன்பகலும் அடங்கும் என்றொழியாது, காலையை வேறு கூறினமையின், அது கருத்து அன்று ஆகலானும், ஆண்டும் வைகறையினையே விடியல் என்றமையிற் காலையை விடியல் என்றல் பொருந்தாமையானும், இதனானே

"விடியல்வெங் கதிர்காயும்" (கலி. ௬௫)

என்புழி விடியற்பின்னர்த்து ஆகிய வெங்கதிர் என்பதே பொருள் ஆம் ஆகலானும், விடிதல் இருள் புலர்தல் என்னும்பொருட்டு ஆகலின், விடியல், புலரி, வைகறை என்பன ஒருபொருட்கிளவி ஆகலானும்,

"ஊடுதல் காமத்திற் கின்பம்
அதற்கின்பம்
கூடி முயங்கப் பெறின்"
(திருக்குறள், காம. ஊடல்
உவகை செ. ௧0)

என்ப ஆகலின், ஊடல் இறுதிக்கட் கூடல் ஒருதலை என்பது பெறப்படுதலின், கற்புக்காலத்து நாள்வெயிற்காலையிற் புணர்தல் முறை அன்மையின், அக்காலத்தின் ஊடல் செல்லாமையானும், அடிசில் கைதொட்ட பின்னர்ப் பயம் இன்றிக் கழியும் பின்பகல் புராணக்கேள்வி முதலியவற்றான் ஆதல், விளையாட்டு முதலியவற்றான் ஆதல் பொழுது போக்கப்படுவது அல்லது விதிக்கப் படும் கருமம் ஒன்றற்கும் உரித்து அன்மையின், அதனை ஒன்றாக வைத்து எண்ணிச் சிறுபொழுது அறுவகைத்து என்றல் பொருந் தாமையானும், ஆசிரியர், முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை என முறை செய்தற்கு ஏது மாலை, யாமம், வைகறை, காலை, நண்பகல் என்னும் சிறுபொழுதின் கிடக்கை முறையே அன்றி வேறு இன்மையானும், ஏனைத் திணைகட்குச் சிறுபொழுது ஒரோவொன்றே ஆகலின், மருத மாத்திரைக்கு இரண்டு கோடல் பொருந்தாமையானும், அஃது உரை அன்று என மறுக்க. வைகறு விடியல்: இராப்பொழுது தன்னோடு கழிவுறுதற்கு ஏதுவாகிய விடியல் என்க.

"விளம்பழங்
கமழுங் கமஞ்சூழ் குழிசி"
(நற்றிணை. செ. கஉ)

என்னும் நற்றிணையுள் வைகுறு புலர்விடியல் என்றதும் அப் பொருட்டு. அற்றைநாட்பொழுது தன் எல்லையோடு அறுதல் பற்றி வைகறை எனவும்படும். வைகுதல் கழிதல் என்னும்

பொருட்டு. "ஆடலின் னரவமும்" என்னுஞ் செய்யுளின் நச்சி ஞர்க்கினியாநும் "வைகரெறும் வைகின்றே" என்பதற்கு நாடோறும் கழியாநின்றது எனப் பொருளுரைத்தார். இவ்வாறு அன்றி மாலையும் இடை யாமமும் கழியும் துணையும் அக்கங்குல் வைகுறுதலின் வைகுறுவாயிற்று என்பார்க்கு, ஏனைப் பொழுது களும் தமக்கு முன்னுள ஆகிய பொழுதுகள் கழியும்துணையும் தாம் வைகுறுதலின், அவையும் அப்பெயர்பெறுவான் செல்லும் என்று ஒழிக. பெரும்பொழுது ஆறு என்றார்க்குச் சிறுபொழு தும் ஆறு என்றலே பொருத்தம் உடைத்து எனின், அங்ஙனம் கூறுவார்க்கு, மருத நெய்தல்கட்குப் பெரும்பொழுது எல்லாம் உரிய என்றார்க்குச் சிறுபொழுதும் எல்லாம் உரியவென்றல் பொருத்தம் உடைத்து எனல் வேண்டுதலின், அது கடா அன்று என விடுக்க.

உரிச்சொல் இயல்பு உளங்கொளற்பொருட்டு, நால்வகைச் சொற்களும் தெரிக்கல் உற்றுழி இடைச்சொல் என்றதன் கார ணம் கூறியதற்கு எடுத்துக்காட்டிய புகுந்து, இத்துணையும் விரிந் தது என்று உணர்க. இவ்வாறு ஆகலின், எழுத்து என்றதற்கு ஈண்டுக் கூறியதே முடிபு எனக் கொள்க.

எழுத்து + எனப்படுப—'எழுத்தெனப்படுப'.

இனி யாசிரியர்,

"நூறென் கிளவி யொன்றுமுத லொன்பாற்
கீறுசினை யொழிய இனவொற்று மிகுமே"

(தொல். எழுத்து. சஎஉ)

எனவும்,

"ஆறன் மருங்கிற் குற்றிய லுகரம்
ஈறுமெய் யொழியக் கெடுதல் வேண்டும்"

(தொல். எழுத்து. சசுக)

எனவும், நூறு என்னும் எண் முன்னும், ஆறு என்னும் எண் முன்னும் முறையே ஒன்று முதலிய எண்களும் ஆயிரமும் வந்து புணரிற் குற்றியல் உகரம் கெட நின்ற ஒற்றின்மேல் உயிர் வந்து ஒன்றி முடியும் என்றார். எனவே, ஒன்றின முடித்தல் என்பதனால் ஏனைக் குற்றியல் உகர ஈறும் உயிர் முதல்மொழி வந்து புணர்வுழிக் குற்றியல் உகரம் கெட்டு நின்ற ஒற்றின்மேல் உயிர்

தொல்காப்பிய

முதற்சூத்திர விருத்தி

வந்து ஒன்றி முடியும் என்பதூஉம் பெறப்பட்டது. ஆகலின், ஈண்டும் அவ்வாறே குற்றியல் உகரம் கெட நின்ற தகர ஒற்றின் மேல் எகர உயிர் வந்து ஒன்றி 'எழுத்தெனப்படுப' என முடிந்தது.

அஃதேல், நாகரிது என்புழி முன்னர்க் குற்றுகர ஓசையும் பின்னர் உயிர் ஓசையும் பெற்று அவ்விரண்டும் கூடி நின்றல்லது அப்பொருள் உணர்த்தல் ஆகாமையின், குற்றியல் உகரத்து இறுதி முன்னும் புள்ளி ஈற்று முன்போல உயிர்முதல் மொழி வந்தால் அவ்வுயிர் ஏறிமுடியும் என்னுமோ? எனின், என்னும். என்னை? அங்ஙனம் கூறுவார்க்குக் கதவழகிது, கனவழகிது என்புழியும் முன்னர் முற்றுகர ஓசையும் பின்னர் உயிர் ஓசையும் கூடி அல்லது அப்பொருளுணர்த்தல் ஆகாமையின், அவற்றை யும் முற்றுகரத்தின்மேல் உயிர் ஏறி முடிந்தது எனக் கூறல் வேண்டும். அவ்வாறு அன்றி முற்றுகரம் கெட நின்ற ஒற்றின் மேல் உயிர் ஏறி முடியும் என்பதே எல்லார்க்கும் ஒப்ப முடிந்தது ஆகலானும், குற்றியல் உகரத்திற்கும் உயிர் என்னும் குறியீடு கொண்டமையின், ஒற்றின்மேல் அன்றி உயிரின்மேல் உயிர் ஏறு தல் பொருந்தாமையானும் நாகரிது என்புழி இதழ் சிறிது குவி தல் ஆகிய முயற்சி ஆண்டுப் பெறப்படாமையிற் குற்றியலுகர ஓசை ஆண்டு உண்டு என்றல் பொருந்தாமையானும், "ஆறன் மருங்கின்" என்றற் றொடக்கத்துச் சூத்திரங்களோடு மாறுனுத லானும், யகரம் வருவழி இகரம் குறுகி உகரத்தின் மேல் ஏறி முடியும் என்னது,

"இகரங் குறுகு

முகரக் கிளவி
துவரத் தோன்ருது"
(தொல். எழுத். ௪௪0)

என்ருர் ஆகலானும் என்பது. இங்ஙனம் கூறிய ஆசிரியர் கருத்து நோக்காது, யாம் பிடித்ததே சாதிப்பேம் என்னும் கருத்தாற்

"புள்ளியொடு
நிலையல்"
(தொல். எழுத். ௧0௪)

என்பதனேடு
மாட்டெறிந்து

"குற்றிய

ஔகாரமும் அற்றென
மொழிப''
(தொல். எழுத். ௧0௫)

௫௬ தொல்காப்பிய
முதற்சூத்திர விருத்தி

எனப் புணரியல் முதற்கட்
கூறிய சூத்திரத்தினைப்

"புள்ளி யீற்றுமுன்
உயிர்தனித் தியலாது''
(தொல். எழுத். ௧௩௮)

என அவ்வியலின் இறுதிக்கட் கூறிய சூத்திரத்தோடு மாட்டெறிந்து பொருள் கூறி, ஆறுயிரம் நூற்றொன்று முதலியவற்றிற்கும் சூத்திரக் கிடக்கைமுறை நோக்காது, குற்றியல் உகரத்தைப் புள்ளியீற்றோடு தாங்கள் மாட்டெறிந்ததற்கு எற்பவே பொருள் உரைத்தார் மாட்டேற்று முறைமை உணராத உரையாசிரியரை யுள்ளிட்டோர் என உணர்க. இன்னும் "அவற்றுள் மெய்யீ றெல்லாம்" என்னுஞ் சூத்திரத்துள் அவ்வீற்றின் மெய் உயிர்முதன் மொழி வந்தால் அஃது எற இடம் கொடுத்து நிற்கும் என்பதூஉம் கூறினர் ஆயிற்று என

உரைத்தார். இச் சூத்திரத்தால் இவ்விதியும் கூறினார் ஆயிற்றேல், "புள்ளியீற்று முன்" எனச் சூத்திரம் செய்தது கூறியது கூறல் என்னும் குற்றம் தங்குதற்கோ ? எனக் கூறி மறுக்க.

'எனப்படுப'

## செயப்பாட்டுவினை

இனி, 'எனப்படுப' என்பது என் என்னும் முதனிலைமீதே செயப்படுபொருண்மை உணர்த்தும் படு என்னும் விகுதியும் அகரச்சாரியையும் வந்து புணர்ந்து, எனப்படு என நின்றவழி, அதுவும் முதனிலைத் தன்மைப்பட்டு, மேல் வரும் அகர விகுதியும் பகர இடைநிலையும் பெற்று, எனப்படுப என முடிந்த பலஅறி சொல்.

அற்றேல், என என்னும் செய என் எச்சம் படுப என்னும் வினைகொண்டு முடிந்தது என்றாற் படும் இழுக்கு என்னை? எனின், அறியாது கடாயினாய். செய என் எச்சம் நிகழ்காலத்தின்கண் இது நிகழாநிற்க இது நிகழ்ந்தது என்னும் பொருட்டாயும், இறந்தகாலத்திற் காரணப்பொருட்டாயும், எதிர்காலத்திற் காரியப்பொருட்டாயும் வரும். அங்ஙனம் இருவினைப் பொருள் தாராது, தொழில் உறுவது ஆகிய ஒருவினைப்பொருளே தந்து நிற்பது ஒன்று ஆகலானும் இருவினை என்பார்க்குப் படுசொற் செயப்படுபொருள் உணர்த்தாது, வேறோர் வினை உணர்த்தல் வேண்டும்; அது பொருந்தாமையானும், "இல்வாழ்வா



னென்பான்"[1] என்புழி எனப்படுவான் என விரித்தமையானும் யாம் கூறியதே முடிபு என உணர்க.

பிறவினை

செய்வித்தான் என்புழியும், செய்வி என்று இயல்பாய் ஒரு சொல் இன்மையிற் செய் என்னும் முதனிலைமேல் ஏவற் பொருண்மை உணர்த்தும் விகர விகுதி வந்து செய்வி என நின்றவழி, அதுவும் முதனிலைத்தன்மைப்பட்டு மேல் வரும் ஐம் பால் மூவிடங்கட்கு உரிய விகுதிகளும், முக்காலமும் காட்டும் இடைநிலைகளும் பிற விகுதிகளும் ஏற்று நிற்கும். எழுந்திருந் தான், எழுந்திட்டான் என்புழி இரு இடு என்பன பகுதிப் பொருள் விகுதியாய் முதனிலையோடு இயைதற்கு உரிய துச் சாரியை பெற்று எழுந்திரு எழுந்திடு என நின்றவழி, அவையும் முதனிலைத்தன்மைப்பட்டு, மேல் வரும் விகுதி முதலிய ஏற்று நிற்கும். இஃது அறியாதார் எழுந்திருந்தான் எழுந்திட்டான் என்புழி இருந்து இட்டு என்பனவே இடைச்சொல்லாம் என்பர். எழுந்திருக்கின்றான் எழுந்திடுகின்றான் என ஏனைக் காலங்க ளோடு வருவழி இரு இடு எனவே வேண்டுதலின், ஈண்டும் அவ் வாறே இறந்தகால இடை நிலை ஏற்று நின்றன எனக் கொள்க. செய்துவிட்டான் செய்தொழிந்தான் என்புழி விடு ஒழி என்பன ஒருதலை[2] என்னும் பொருட்கண் வந்த விகுதி. செய்துகொண் டான் என்புழிக் கொள் என்பது வினைப்பயன்[3] வினைமுதலைச்[4] சென்று அடைதல் ஆகிய தற்பொருட்டுப் பொருட்கண் வந்த விகுதி. இதனை வடநூலார் ஆற்பனே பதம் என்ப.

போக்கு, பாய்ச்சு, ஊட்டு, நடத்து, எழுப்பு, தீற்று என் புழிக் குகர முதலியன விப்பிப் பொருளின் வந்த விகுதி. உண்ணுநின்றான், உண்ணுகிடந்தான், உண்ணுவிருந்தான் என் புழி நில், கிட, இரு என்னும் நிகழ்கால இடைநிலைகளும் ஆகாரச் சாரியையும் புணர்ந்து, உண்ணுநில், உண்ணுகிட, உண்ணுவிரு என நின்றவழி, அவையும், முதனிலைத் தன்மைப்பட்டு, நிகழ் காலத்துள்ளும் முக்காலம் உண்மையின் அவற்றிற்கு ஏற்ற கால இடைநிலைகளும் பால் இடம் காட்டும் விகுதிகளும் ஏற்றுநிற்கும்.

---

1. திருக்குறள், அறத்துப்பால், செ. 1.
2. நிச்சயம்.

3. வினையினது பயன்.
4. கருத்தாவை.



இன்னும் இங்ஙனம் வேறுபட வருவன எல்லாம் இவ்வாறே எற்ற பெற்றி அறிந்து முடித்துக்கொள்க. இன்னும் இவற்றைக் கடா விடைகளான் விரிப்பிற் பெருகும் என்று ஒழிக. இன்னோர் அன்ன விகுதிகள் எல்லாம் முதனிலைத் தன்மைப்பட்டு மேல் வரும் விகுதி ஏற்று நிற்கும் என்பதே வடநூலார்க்கும் துணிபு என்க. உய்த்துவிடும், காட்டிவிடும் என்றற்றொடக்கத்துச் சொற்களைப் பரிமேல் அழகியார் முதலாயினோர் ஒருசொல் என்றதூஉம் இக்கருத்தே பற்றி எனக் கொள்க.

எனப்படுப + அகரம் = 'எனப்படுப வகரம்'

எழுத்தெனப் படுபெ வகரமுதல் என்புழி, வகரம் நிலை மொழி ஈற்றினும் வருமொழி முதலினும் நின்ற உயிர்களை உடம் படுத்தற்கு வந்த கருவி ஆகலின், அஃது உடம்படுமெய் என்று ஆயிற்று. உடம்படுத்தல் எனினும் உடன்படுத்தல் எனினும் ஒக்கும். அஃது "உடம்பாடு இலாதவர் வாழ்க்கை" என்பதனானும் அறிக.

"உடம்படு மெய்யின் உருபுகொளல் வரையார்"[1]

என ஆசிரியர் பொதுப்பட ஓதினாரேனும், உயிர்களை உடம்படுத்தற்கு உரியன இடப்பிறவியான் அவ்வுயிரோடு ஒத்த இடையெழுத்து என்பதூஉம், அவற்றுள்ளும் மொழிமுதற்கண் வருதற்கு உரியன யகர வகரங்களே ஆகலின், அவையே ஈண்டைக்கு வரப்பெறும் என்பதூஉம் தாமே விளங்கும். அவற்றுள்ளும், பெரும்பாலும் இ ஈ ஏ ஐ முன்னர் யகரமும், ஏனை உயிர்களின் முன்னர் வகரமும் வரும் என்பது ஏற்புழிக்கோடலாற் பெறப்படும் ;

"உடம்படு மெய்யே யகார வகாரம்
உயிர்முதன் மொழிவரூஉங் காலை யான"[2]

என்பவாகலின்.

அங்ஙனம் வரும் யகர வகரங்களே உடம்படுமெய் எனப் பெயர் பெறும் என்க.

"விண்வத்துக் கொட்கும் வண்ணத் தமரர்" என்புழி வகரம் உடம்படாதவற்றை உடம்படுத்த வந்த தல்லாமையின், இன்னோரன்னவை உடம்படு மெய் எனப் பெயர்பெறு மாறு இல்லை என்பது. இஃது இருமொழியும் உடம்படுத்தற்கு

1. கொல். எழுத்து. புணரியல், சூ. ௩௮.
2. இது அகத்தியச் சூத்திரம்போலும்.

வருங் கருவியாகலின், ஆசிரியர் இச்சூத்திரத்தைச் செய்கை யோத்துட் கூறுது கருவியோத்துட் கூறினர். "புள்ளி யீற்று முன்" "மெய்யுயிர் நீங்கின்" என்பனவும் வரிவடிவின்கண் அறிந்து கோடற்குச் செய்த கருவியாகலிற் கருவியோத்துள் வைக்கப்பட்டன. நாகரித என்புழி ஒலியெழுத்தின்கட் படும் செய்கை இதனேடு இயையாமையானும், கருவியோத்துட் புணர் மொழிச் செய்கை கூறுதல் பொருந்தாமையானும், மேற்கூறிய வாற்றனும்,

"குற்றிய லுகரமும் அற்றென மொழிப"

என்பதற்கியாம் உரைத்ததே பொருள் என்பது தெற்றென உணர்க. இப்பெற்றி உணராத உரையாசிரியர், நச்சினர்க்கினி யார் "புள்ளியீற்று முன்"[1] "மெய்யுயிர் நீங்கின்"[2] என்பவற்றை ஒலியெழுத்தின்கட்படும் செய்கை என மயங்கிக்,

"குற்றிய லுகரமும் அற்றென மொழிப"

(தொல். புணரியல் ந)

என்பதனை இதனேடு மாட்டெறிந்ததூஉம் அன்றி,

"உருவுரு வாகி

யகரமோ டுயிர்த்தலு

மேனை யுயிரோ

டுருவுதிரிந் துயிர்தலும்"

(தொல்.

நூன். கஎ)

என்புழி உயிர்த்தல்

என்பதற்கு ஒலித்தல் எனப்

பொருள் கூறி னார்.

உருவுரு ஆகி உயிர்த்தலும்,

உருவு திரிந்து உயிர்த்தலும்,

புள்ளி உண்டாதலும், இல

ஆதலும் வரிவடிவிற்கே அன்றி ஒலி வடிவிற்கு இன்மையின், அவை போலி உரை என்க.

'அகர முதல்'; 'னகர இறுவாய்'

## அன்மொழித்தொகை

இனி 'அகர முதல், னகர விறுவாய்' என்பன பண்புத் தொகை நிலைக்களத்துப்பிறந்த அன்மொழித்தொகை.

பண்புத்தொகைப் பொருள்படத் தொக்கவழி அஃது அன் மொழித்தொகை ஆகாமையிற் பண்புத்தொகையிற்பிறந்த அன்

1. தொல். எழுத்து. புணரியல். சூ. ௩௬.
2. ,, ,, ,, ௬௭.

மொழித்தொகை என்னுது, பண்புத்தோகைக்கு நிலேக்கள மாகிய சோல்லிற் பிறந்த தோகை என்பது விளக்கிய தோல் லாசிரியர் எல்லாம் பண்புத்தோகை நிலேக்களத்துப்பிறந்த அன்மோழித்தோகை என வழங்கியவாறு. பிறவும் அன்ன.

அகரம் னகரம் என்பன பண்பல்ல ஆயினும், பண்பு தோக்க தோகைபோல விசேடிப்பதூஉம் விசேடிக்கப்படு வதூஉம் ஆகிய இயைபுபற்றி, இன்னோரன்னவையும் பண்புத் தோகை எனப்பட்டன.

அற்றேல், தொக்க இருமொழிப் பொருளும் தாராது புற மொழிப் பொருளைத் தருவது அன்மொழித்தொகை ஆகலின், அகர முதல் னகர இறுவாய் என்புழி அன்மொழித்தொகையான் அகரமும் னகரமும் ஒழித்து ஒழிந்த இருபத்தெட்டுமே கொள் ளப்படும்; அவ்வாறு அன்றி அவற்றையும் உடன் எண்ணி முப் பஃது என்றல் நிரம்பாதாம் பிற எனின், ஆகுபெயர் விட்ட ஆகு பெயரும் விடாத ஆகுபெயரும் என இருவகை ஆயவாறுபோல, அன்மொழித்தொகையும் விட்ட அன்மோழித்தோகையும் விடாத அன்மோழித்தோகையும் என இருவகைப்படும். அவற் றுள், இது, விடாத அன்மொழித்தொகை ஆகலின், நிரம்பும் என்க. அகர ஈறு புள்ளி ஈற்று முன் என்றாற்போல்வனவும் அவை. பொற்றொடி புகன்றாள், ஒண்ணுதல் உண்டாள் என்பன விட்ட அன்மொழித்தொகை. வடநூலார் விடாத அன்மொழித் தொகையைத் தற்குண சம்விஞ்ஞான வேதுவிரீகி என்றும், விட்ட அன்மொழித்தொகையை அதற்குண சம்விஞ்ஞான வேதுவிரீகி என்றும் கூறுவர்.

ஆகுபெயரும் அன்மொழித்தொகையும்

அற்றேல், ஆகுபெயரும் அன்மொழித்தொகையும் தம் பொருள் உணர்த்தாது பிறிது பொருள் உணர்த்துதலான் ஒக்கும் ஆகலின், அவை தம்முள் வேற்றுமை யாதோ? எனின், ஆதபெயர் ஒன்றன்பெயரான் அதனோடு இயைபுபற்றிய பிறிது ஒன்றனை உணர்த்தி ஒருமொழிக்கண்ணதாம்; அன்மொழித் தொகை இயைபு வேண்டாது இருமொழியும் தொக்க தொகை யாற்றலாற் பிறிது பொருள் உணர்த்தி இருமொழிக்கண்ணதாம். இவை தம்முள் வேற்றுமை என்க.

இருபெயரொட்டாகுபெயர் இருமொழிக்கண் வந்தது அன்றோ? எனின், அன்று. என்னை? வகரக்கிளவி, அது ஆகுகிளவி, மக்கட்சுட்டு என்னும் இருபெயரொட்டு ஆகுபெய

தொல்காப்பிய

முதற்சூத்திர விருத்தி

௬௧

ருள், வகரமும், அது ஆதலும் மக்களும் ஆகிய அடைமொழிகள் கிளவி, சுட்டு என்னும்

இயற்பெயர்ப்பொருளை
விசேடித்து நில்லாது,
எழுத்தும்,
சொற்பொருளும்,
பொருளும் ஆகிய ஆகு
பெயர்ப்பொருளை
விசேடித்து நிற்பக், கிளவி
சுட்டு என்பனவே
ஆகுபெயரால் அப்பொருளை
உணர்த்த,
இருபெயருமொட்டி நிற்கும்
ஆகலின். இனிப்
பொற்றொடி என்னும்
அன்மொழித் தொகையிற்

பொன் என்பது அவ்வாறு அன்மொழித்தொகைப் பொருளை விசேடித்து நில்லாது, தொடியினையே விசேடித்து நிற்ப அவ்விரண்டன் தொகைஆற்றலான் அன்மொழித்தொகைப் பொருளை உணர்த்துமாறும் அறிக. இக்கருத்தே பற்றி மக்கட் சுட்டு முதலியவற்றைப் பின்மொழி ஆகுபெயர் என்பாரும் உளர். இனி

மக்கட்சுட்டு என்புழி மக்கள் என்பது ஆகுபெயரான் மக்கட் கருத்தை உணர்த்திற்று என்பார்க்கு, அங்ஙனம் உணர்த்திற்றேல்,

"பாணன் பறையன் துடியன் கடம்பனென்(று)
அந்நான் கல்லது குடியு மில்லை''

(புறநானூறு செ. ௩௩௫)

என்புழிப் பாணன் முதலியனபோல மக்கள் என்பது ஆண்டு அஃறிணைச் சொல்லாதல்வேண்டும்; வேண்டவே, அஃதல பிறவே என வஃறிணைச் சுட்டுப்பெயராற் கூறுது, "அவரல பிற" எனல் திணைவழுவாய் முடியும் ஆகலின், அஃது ஆசிரியர் கருத்தன்று என்றொழிக. மக்கட்பொருள் எனவே அமையும் ஆயினும், அப்பொருட்கு உயர்திணை எனக் குறியிட்டதற்குக்

காரணம் தோன்ற, மனத்தோடு ஆறு அறிவினரே மக்கள் என மரபியலுட் கூறும் உயர்ச்சிபற்றி மக்கள் ஆகிய நன்கு மதிக்கப் படும் பொருள் என்பார் மக்கட்சுட்டு என்றார். மக்கள் என்பது பொதுமையின் நீக்கிப் பொருளை விசேடித்து நிற்பச் சுட்டு என்பது விடாத ஆகுபெயராய் அப்பொருளின் உயர்ச்சி உணர நிற்ப, இருபெயரும் ஒன்றனை ஒன்று விசேடித்து இன்னது இது என வருமாறு

காண்க.

இனிச் சேனாவரையர்

ஆகுபெயரும்

அன்மொழித்தொகை

யும் ஒன்றே எனவும், இயர்பெயர் ஆகுபெயர் எனப் பெயர் இரண்டாய் அடங்கும்வழிப் பொற்றொடி என்பதொரு பெயர்ப்

பட்டது ; அதுவே

அன்மொழித்தொகை

ஆதலும் உடைமை யான்

எச்சவியலுள்ளும்

கூறப்பட்டது எனவும்

கூறினார். அது

# முதற்சூத்திர விருத்தி

வடநூல் விதியோடு முரணுதலானும், வடநூலோடு மாறுகொள்ளாமற் கூறலே ஆசிரியர் மேற்கோள் என "அதனினியறல்"[1] என்னும் சூத்திரத்துத் தாமும் கூறினர் ஆகலானும், அவர்க்கு அது கருத்து அன்று என்க.

இன்னும் அவர் சாத்தனதனை சாத்தனதனொடு என்புழிச் சாத்தனது என்பது துவ்விகுதியும் அகரச்சாரியையும் பெற்று, உருபேற்று நின்ற பெயர் ஆகலின் ஆண்டு அது என ஒன்றாக வைத்து, ஆறன் உருபு என்றல் பொருந்தாது என்பதும் நோக்காது, உருபு ஏற்றல் பெயர்க்கே உரிய இலக்கணம் என்பதும் நோக்காது, எச்ச இயலுட் கூறும் தொகைச்சொற்கண் உருபு தொகுதல் ஈண்டுக் கூறுதற்கு ஓர் இயைபு இன்று என்பதும் நோக்காது, இனம் அல்லவற்றை உடன் எண்ணுதல் மரபு அன்று என்பதும் நோக்காது, "பிறிது பிறிதேற்றலும்"[2] என்பதற்கு ஆறன் உருபு பிறிதோர் உருபை ஏற்றலும், ஆறுருபும் தொக்கு நிற்றலும் வழு ஆகா என உரையாசிரியர் உரைத்தவாறே உரைத்தார். இதுவும் அவர் கருத்து அன்று. இச்சூத்திரப்பொருள் முன்னர்க் கூறுதும் ஆண்டுக் காண்க.

இன்னுமொரோரோவோர் இடங்களில் இவ்வாறே மயங்கிக் கூறுவர். அங்ஙனமொரோவழி மயங்குதல்பற்றி அவரை இகழற்க. நச்சினார்க்கினியார் முதலியோர்போல யாம் பிடித்ததே சாதிப்பேம் என்னும் செருக்கால் யாண்டும் மயங்காமையின், முக்குணங்களும் மாறிமாறி வருதலின், அது எனைத்துணை நுண்ணறிவாளரும் ஒரோவழி மயங்குதல் இயல்பு என்க. இக் கருத்தேபற்றி அன்றே,

"அரியகற்(று) ஆசற்றார் கண்ணும் தெரியுங்கால்
இன்மை யரிதே வெளிறு"
(திருக்குறள், பொருட்பால், தெரிந்துதெளிதல், செ. ரு)

"குணம்நாடிக் குற்றமும் நாடி யவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல்"

(திருக்குறள்,

பொருட்பால்,

தெரிந்துதெளிதல், செ. சு)

என்றார் தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனாரும் என்பது. இங்ஙனம் ஆகலின், வடமொழியினும் ஆசிரியர் பாணினியார்

1. தொல். சொல். வேற்றுமை இயல், சூ. கக.
2. தொல். சொல். வேற்றுமை மயங்கியல், சூ. உ௬.

# தொல்காப்பிய

# முதற்சூத்திர விருத்தி

## சா ரு

தொல்லாசிரியர் சூத்திரங்களுட் சிலவற்றைத் தம்முடைய சூத்திரங்களால் எடுத்து ஓதி மறுத்து வேறு விதி கூறுவர். அவர் சூத்திரங்களுட் சிலவற்றை ஆசிரியர் வரருசியார் எடுத்து ஓதி மறுத்து வேறு விதி கூறுவர். அவ்விருவரையும் ஒரோர் இடங்களின் ஆசிரியர் பதஞ்சலியார் எடுத்து ஓதி மறுத்து வேறு விதி கூறுவர். அதுபற்றி அவர் இகழப்பட்டார் என்க. அஃதேல், ஆசிரியர் அகத்தியனார் தொல்காப்பியனார் பதஞ்சலியார் முதலாயினாரும் ஒரோவழி அவ்வாறு மயங்கிக்கூறுபவாலோ எனின் அவர் தவத்தான் மனம் தூயராய் முக்குணங்களையும் கடந்து இறைவன் அருள் பெற்றுடையர் ஆகலின், அன்னர் அல்லர் என உணர்க. ஆகுபெயரும் வேறே, அன்மொழித் தொகையும் வேறே என்பது ஆசிரியர் கருத்து எனக் கொள்க.

'னகர விறுவாய்'

‘னகர விறுவாய் என்புழி, இறுவாய்’ என்பது வினைத்தொகை நிலைக்களத்துப்பிறந்த அன்மொழித்தொகையாய், இறுவாய்க்கண் நின்ற எழுத்தை உணர்த்திற்று. அதனை னகரம் விசேடித்து, இன்னது இது என்பதுபட வருதலின், னகர விறுவாய் என்பது பண்புத்தொகை நிலைக்களத்துப்பிறந்த அன்மொழித்தொகை ஆதல் அறிக.

# வினைத்தொகை

அற்றேல்,

வினைத்தொகையாவது .

“செய்யுஞ் செய்த
என்னுங் கிளவியின்
மெய்யொருங்
கியலுந் தொழிறொகு
மொழி”

ஆகலின், அது பெயர்ச்சொற்கொண்டு முடியாது, வாய் என்னும் இடைச்சொற்கொண்டு முடிதல் அமையாதாம் பிற எனின், இடைச்சொல் எல்லாம் ஒருவாற்றாற் பெயரெனப்படும் ஆகலின் அமையும் என்க.

"வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை"[1] "நினைத்தொறுங் காண்டொறும் பேசுந்தொறு மெய்ப் போதும்" என்றாற்போல்வனவும் இவ்வாறே கொள்க.

1. திருக்குறள், பொருட்பால், குற்றம் கடிதல், செ. ௫.

அகரம் + முதல் = ‘அகர முதல்’

னகரம் + இறுவாய் = ‘னகர விறுவாய்’

அகர முதல் னகர விறுவாய் என்புழி, இருபெயரொட்டுப் பண்புத்தொகை எல்லாம் வேற்றுமை வழியோடு ஒக்கும் ஆகலின்,[1] “துவரக் கெட்டு” என்பதனான் மகரம் கெட்டு,

“நின்ற சொன்முன் இயல்பா கும்மே”

(தொல். எழுத்து. தொகைமரபு. சூ. உ)

என்பதனான் இயல்பாய் முடிந்தன.

முதல் + னகரம் = ‘முதனகரம்’

அகரம் னகரம் எனக் கரச்சாரியை பெற்றவழிச் சொற்றன்மை எய்தி நிற்றலின், ஆண்டு நின்ற முதல் என்பதன் லகரம், "நெடியதன் முன்னர்"[2] என்னும் சூத்திரவிதி "குறுமையு நெடுமையும்"[3] என்பதனாற் பெற்றுக்கெட்டது.

அற்றேல், மொழிக்கு முதலாம் எழுத்துக்கள் வந்து புணர்வுழிப்படும் செய்கை அன்றே? ஈண்டுப் பெறப்படுவது; னகரம் மொழிக்கு முதல் ஆவது அன்மையின், அது வந்து புணர்வுழிச் செய்கைப்படுமோறு என்னை? எனின், அற்றன்று: மொழிக்கு முதல் ஆகாதனவும் சொற்றன்மை எய்திப் புணர்ந்தவழி, மொழிக்கு முதலாம் எழுத்துப் புணர்வுழிப்படும் செய்கை செயப்படும் என்று கோடற்கு அன்றே? ஆசிரியர்,

"முதலா வேன தம்பெயர் முதலும்"

(தொல். எழுத்து. மொழிமரபு. சூ. ௩௩)

எனக் கருவி செய்தார் என்க. அஃதேல், "வல்லெழுத் தியையின், டகார மாகும்"

(தொல். எழுத்து. புள்ளிமயங். சூ. எ)

என்புழியும், "மன்னுஞ் சின்னும்"[4] என்னும் சூத்திரவிதியால் னகாரம் றகாரம் ஆகல் வேண்டும் எனின், றகரம் முன்னர் டகர மயங்காமையின், வேண்டா ஆயிற்று என்க.

---

1. தொல். எழுத்து. புள்ளிமயங்கியல், சூ. கரு.
2. தொல். எழுத்து, தொகைமரபு. சூ. கஅ,
3. தொல். எழுத்து. மொழிமரபு, சூ, கஎ.
4. தொல். எழுத்து, புள்ளிமயங்கியல், சூ. நஅ,

# தொல்காப்பிய முதற்சூத்திர விருத்தி

## ௬௫

அற்றேல், ணகர எனின்? அது,

## முன்னர் டகர மயங்கியவாறு என்னை

"தம்மியல் கிளப்பின் எல்லா வெழுத்தும்
மெய்ந்நிலை மயக்க மான மில்லை"

(தொல். எழுத்து. மொழிமரபு, சூ. கஅ)

எனக் கருவி செய்தமையான், மயங்கிப் புணர்ந்தது என்க. இச்சூத்திரத்திற்கு இதுவே பொருள் ஆதல் உரையாசிரியர் உரையான் உணர்க.

அற்றேல், றகரமும் அவ்வாறு மயங்குக எனின், அற்றன்று. செய்கை எய்தாது இயல்பாய் வருவனவற்றிற்கே, "தம்மியல் கிளப்பின்" எனக் கருவி செய்தார் என்பது. அங்ஙனம் அல்லாக்கால், இவை மயங்கும் இவை மயங்கா என முற்சூத்திரங்களால் வரையறுத்துக் கருவி செய்தது பயன் இன்றாய் முடியும் என்க.

## 'முப்பஃது'

இனி, 'முப்பஃது'
என்பதனை,
"ஒன்றுமுத
லொன்பான் இறுதி
முன்னர்'
(தொல். எழுத்.
குற்றியலுகரப் புணரியல்,
சூ. ௩௨)
"மூன்று மாறும்"
(தொல். எழுத்து.
குற்றியலுகரப்புணரியல், சூ.
௩௫)

"மூன்ற

னொற்றே"

(தொல். எழுத்து.

குற்றியலுகரப்புணரியல், சூ.

ரு௬)

என்னுஞ் சூத்திரங்களாற்

செய்கை செய்து

முடித்துக்கொள்க.

முப்பஃது மூன்றூன் உறழ்ந்த பத்து என விரியும்.
உருபொடு வினைச்சொல்லும் ஒருங்கு விரிதல்

இங்ஙனம்

"வேற்றுமைத்

தொகையே வேற்றுமை
யியல''
(தொல். சொல். எச்ச
இயல், சூ. ௬௭)
என்பதனாற் கொள்க.





தொகைநிலைத்
தொடரும்

தொகாநிலைத்தொடரும்

“வேற்றுமைத்

தொகையே வேற்றுமை

யியல”

(தொல். சொல். எச்ச இயல்,

சூ. கஎ)

என்பது வேற்றுமைத்தொகை விரியுங்காற் றொகாநிலை, வேற்றுமை இயல்பினவாய் விரியும் என்றவாறு. எனவே, அங்ஙனம் விரியும் இயல்புடையது வேற்றுமைத்தொகை என்றது ஆயிற்று. வேற்றுமைத்தொகையே எனப் பிரித்தமையால், முன்வந்த வேற்றுமை தொகாநிலை வேற்றுமை என்பதூஉம், தொகாநிலை வேற்றுமை இயல எனவே விரியுங்கால் என்பதூஉம் தாமே போதரும்.

“உவமத் தொகையே உவம வியல”

(தொல். சொல். எச்ச இயல்,

சூ. கஅ)

என்பதற்கும் இவ்வாறு உரைத்துக்கொள்க.

"வேற்றுமைத் தொகையே வேற்றுமை யியல"

என்றற் றொடக்கத்துச் சூத்திரங்களாற் றொகைச்சொற்கள் விரியுமாறு கூறும் முகத்தான் அவற்றிற்கு இலக்கணம் கூறிய வாறு.

இனி,

"வேற்றுமைத் தொகையே வேற்றுமை யியல"

என்பது ஆற்றல் உள்ளன தொகும்; அல்லன தொகா என்பது விளக்குதற்பொருட்டு எழுந்தது என்பாரும் உளர். அஃதே இலக்கணம் அன்மையானும், அப்பொருள் இதனுள் அடங்குத லானும் அது போலிஉரை என்க.

"வேற்றுமைத் தொகையே வேற்றுமை யியல"

என்றற் றொடக்கத்துச் சூத்திரங்களால் வேற்றுமைத்தொகை முதலியவற்றிற்குச் சிறப்பிலக்கணங் கூறி,

"எல்லாத் தொகையும் ஒருசொன் னடைய"
(தொல். சொல். எச்ச இயல், சூ. உச)

என்பதனாற் பொதுஇலக்கணங் கூறியவாறு அறிக.

அற்றேல், தொகாநிலை வேற்றுமை யியல்பாவது என்னை எனின், கிழமைப்பொருட்கண் வரும் ஆறுவது ஒழித்து ஒழிந்த

# தொல்காப்பிய

# முதற்சூத்திர விருத்தி

## சுள

உருபுகள் எல்லாம் காரகப் பொருள ஆகலின், வினைகொண்டு அன்றி முடியாமை என்க. கண்ணாற் கொத்தை, காலான் முடம் எனவும், கரும்பிற்கு வேலி, கடிசூத்திரத்திற்குப் பொன் எனவும், வேங்கடத்தின் தெற்கு, குமரியின் வடக்கு எனவும், குன்றத்துக்கட் குவடு, குன்றத்துக்கட் கூகை எனவும், இவை பெயர்கொண்டு முடிந்தனவாலோ எனின், அற்றன்று: கூறும் வழி அவ்வாறு வரினும், பொருள்படும்வழிக் கண்ணாலறியப் படும் கொத்தைமையன், காலாலறியப்படும் முடத்தன்மையது எனவும், கரும்பிற்குக் கோலிய வேலி, கடிசூத்திரத்திற்கு வைத்த பொன் எனவும், வேங்கடத்தின் தெற்குள்ளது, குமரியின் வடக்குள்ளது எனவும், குன்றத்துக்கண்ணுள்ள குவடு, குன்றத்தின் கண் ணிருந்த கூகை எனவும், வினைகொண்டு அன்றி முடியாமை உணர்க. ஐயுருபு கூறும் வழியும் வினையோடு அன்றி வாராது எனக் கொள்க.

"எவ்வழி வரினும் வினையே வினைக்குறிப்(பு)
அவ்விரு முதலிற் றோன்று மதுவே"

(தொல். சொல். வேற்றுமை

என்றதூஉம் இக்கருத்தேபற்றி என்க. நிலத்தைக் கடத்தல், குழையையுடைமை என்பவற்றுள், கடத்தல் உடைமை என்பனவும் வினை வினைக்குறிப்பு முதனிலை அடியாகத் தோன்றிய பெயராகலின், அவையும் வினை வினைக்குறிப்போடு முடிந்தனவேயாம் என்பது. இக்கருத்தேபற்றி அன்றே? அவ்விரண்டின் என்று ஒழியாது, "அவ்விரு முதலின்" என்றார் என்க. எனவே, செயப்படுபொருள், * பொருள் என்பதூஉம் குறிப்பாற் பெறப்படும். இஃது அறியாதார் தத்தமக்கு வேண்டியவாறே உரைப்ப. அவர்க்கும் செயப்படுபொருள் பொருள் என்றல் குறிப்பான் அன்றி உணரப்படாமையும், அப்பொருள் சிறவாமையும் ஓர்ந்துணர்க.

அற்றேல், அஃது ஆக ;

வேற்றுமைத்தொகை

விரியுமாறு :

"வேற்றுமைப்

பொருளை விரிக்குங் காலை"

(தொல். சொல். வேற்றுமை இயல், சூ. உஉ)

என்னுஞ் சூத்திரத்தாற் பெறப்பட்டதாலோ எனின், வேற்று மைத்தொகையை விரிக்குங்காலை என்னுமையானும், எச்சவிய

* (இரண்டாம் வேற்றுமையின் பொருள் என்பதூஉம் எனக் கொள்க.)



னுட் கூறும் வேற்றுமைத்தொகை விரியுமாறு வேற்றுமை யிய

ஆட் கூறுதற்கு ஓர் இயைபு இன்மையானும், வேற்றுமை இயலுள் உருபும் பொருளும் உருபு நிற்கும் இடமும் மாத்திரையே கூறி யொழிந்தார் அன்றி வேறு ஒன்றும் கூறாமையானும், வேற்று மைத்தொகை விரியுமாறு "வேற்றுமை யியல" என்பதனாற் பெறப்படுதலின், வேறு கூறவேண்டாமையானும், வேண்டும் எனிற் பான்மொழி என்னும் உவமத்தொகையும், பாலின் இனிமைபோலும் இனிமை உடைய மொழி என விரிதலின் உவமத் தொகைக்கட் சொற்பெய்து விரித்தற்கு வேறு சூத்திரம் கூறாமை குன்றக் கூறலாய் முடியும் ஆகலானும், அச்சூத்திரத் திற்கு அது பொருள் அன்று என்று ஒழிக.

அற்றேல், அச்சூத்திரத்திற்குப் பொருள் யாதோ? எனின்,

## கூறுதும :

"வேற்றுமைப் பொருளை விரிக்குங் காலை
ஈற்றுநின் றியலுந் தொகைவயிற் பிரிந்து
பல்லா றாகப் பொருள்புணர்ந் திசைக்கும்
எல்லாச் சொல்லு முரிய வென்ப"

(தொல். சொல். வேற்றுமை இயல், சூ. உ௨)

# என்பது, ஓத்தின்

# இறுதிக்கட் புறனடை.

# இதன் பொருள் :

# "காப்பி னொப்பி

னார்பியி னிமையின்"
(தொல். சொல்.
வேற்றுமை. சூ. கக)

என்றற் றொடக்கத்தன ஆக ஈண்டுக் கூறிய பொருளே அன்றி இன்னும் வேற்றுமைப் பொருளை விரித்துக் கூறுங்காலத்துக் காப்பின் ஒப்பின் என்றற் றொடக்கத்துத் தொகைச் சொற்களின் வேறுபட்டுப் பொருளோடு புணர்ந்து இசைக்கு மெல்லாச் சொற்களும் ஈண்டுக் கோடற்கு உரிய என்பர் என்றவாறு. முடிக்குஞ் சொல்லைப் பொருள் என்றார், தொடர்மொழிப் பொருள் அதன்கண்ணது ஆகலின். "காப்பின்" "ஒப்பின்" முதலிய சொற்கள் புரத்தல், ஓம்புதல், நேர்தல், நிகர்தல் என்றற் றொடக்கத்துப் பொருள் புணர்ந்திசைக்கும் சொற்களை எல்லாம் கருத்து வகையான் உள்ளடக்கித் தொகுத்த மொழியாய் நிற்ற லின், அவற்றைத் தொகை என்றும்,

"அதனி னியறல் அதற்றகு கிளவி"

(தொல். சொல்.
வேற்றுமை இயல், சூ. கங)
தொல்காப்பிய
முதற்சூத்திர விருத்தி

என்றற் றொடக்கத்துத் தொடர்மொழிகளின் இறுதிச் சொற்களே ஈண்டுக் கொள்ளப்படும் என்பது விளக்கிய 'ஈற்று நின்றியலுந் தொகை' என்றும், ஊரைப் பேணும் ஊரைத் தாங்கும் என்றாற்போலப் பிறவாற்றான் வருவனவும் காத்தற்பொருளே பயந்து நிற்றலின், அவையும் தழுவுதற்குப் 'பல்லா றாக' என்றும் கூறினார். காப்பின் ஒப்பின் என்றாரேனும், அதனைக் காத்தல், அதனை ஒத்தல் எனச் சூத்திரம் செய்தலே ஆசிரியர் கருத்து எனக் கொள்க. பிறவும் அன்ன.

அற்றேல், இஃது உத்தியாற் கொள்ளப்படுமாலோ எனின், இன்னோரன்னவை எடுத்தோத்து இல்வழியே உத்தியாற் கொள்வது என மறுக்க. அங்ஙனம் அல்லாக்கால் புறனடை என்பதே வேண்டாதாய் முடியும் என்றொழிக.

இனிச் சேனாவரையர் வேற்றுமைத்தொகை விரியுமாறு கூறுதற்கு எழுந்தது இச்சூத்திரம் என்றும், அது விரியுங்கால் அன்மொழித்தொகை போல விரியும் என்றும், அன்மொழித் தொகைக்கட் சொற்பெய்து விரித்தலும் அநுவாத முகத்தால் ஈண்டே பெற்றாம் என்றும் உரைத்தார். எச்ச இயலுட் கூறப்படும் தொகைச்சொல் விரியுமாறு ஈண்டுக் கூறுதற்கு ஓர் இயைபில்லை என்பது மேற்காட்டினாம் ஆகலானும், அன்மொழித் தொகை விரியுமாறும் ஈண்டே பெற்றாம் எனின், இன்னோரன்னவை அநுவாதமுகத்தாற் பெறுதற்கு உரியன ஆகாது, தன்னைப் பற்றுதல் என்னும் குற்றமாய் முடியும் ஆகலானும், அவை பொருந்தா என மறுக்க. இதனானே உரையாசிரியர் நச்சினார்க்கினியார் உரைகளும் மறுக்கப்பட்டன. வடநூலார் தன்னைப் பற்றுதல் என்னும் குற்றத்தை ஆன்மாச்சிரயம் என்றும், ஒன்றனை யொன்று பற்றுதல் என்னுங் குற்றத்தை இதரேதராச்சிரயம் என்றும் கூறுப.

அற்றேல், எச்ச இயலுட்
கூறப்படும் வேற்றுமைத்
தொகைக் கண் உருபு
தொகுமாறு :
"உருபு தொக
வருதலும்"
(தொல்.
சொல். வேற்றுமை
மயங்கியல், சூ. உக்) எனவும,
"ஐயுங் கண்ணு
மல்லாப் பொருள்வயின்
மெய்யுருபு
தொகாஅ இறுதி யான"

(தொல். சொல். வேற்றுமை மயங்கியல், சூ. ௨௨) என தொல்காப்பிய முதற்சூத்திர விருத்தி

எனவும், வேற்றுமை

மயங்கியலுள் இயைபு இன்றி ஓதியது என்னை ? எனின், அச்சூத்திரங்கட்கு அது பொருள் அன்று ஆமாறு சூத்திரக்கிடக்கை முறையே காட்டுதும். "அச்சக் கிள விக்கு"[1]

என்னும் சூத்திரங்காறும் வேற்றுமை மயக்கம் ஆமாறு கூறி, "அன்ன பிறவும்"[2] என்பதனாற் புறனடையுங் கூறி முடித் துப், பின்னர் உருபு தொடர்ந்து அடுக்குதலும் ஒருமயக்கம் ஆகலின், அதன்கட் படும் இலக்கணம், "உருபு தொடர்ந்தடுக் கிய"[3] என்பதனாற் கூறினார். பின்னர், "இறுதியு மிடையும்"[4] என்னுஞ் சூத்திரத்தால் அங்ஙனம் உருபு தொடர்ந்து அடுக்கும் வழி,

"அரிக்கும் பிரமற்கு மல்லாத தேவர்கட்கும்"

(தொல். சொல். வேற்றுமை மயங்கியல், சூ. உக)

என்றாற் போல இறுதியும் இடையும் உருபு விரிந்தே நிற்றலை நீக்கார் வடநூலார், எனப் பிறர்மதம் கூறிப் "பிறிது பிறிது" என்னுஞ் சூத்திரத்தாற் றமிழ்நடையின் அவ்வாறு நியமம் இன்றி,

"அரிக்கும் பிரமற்கு மல்லாத
தேவர்கட்குந்
தெரிக்கும் படித்தன்றி
நின்ற சிவம்"

"கிழவன் றன்னொடுங்
கிழத்தி தன்னொடும்
நற்றாய் கூறன் முற்றத்
தோன்றாது"

(தொல். பொருள்.
செய்யுள் இயல், சூ, ககூஉ)

என இறுதியும் இடையும்
உருபு எற்றலும்,

"அருமந்த தேவ
ரயன்றிருமாற் கரியசிவம்"

"ஒண்டொடி மாதர்
கிழவன் கிழத்தியொடு
கண்டோர்
மொழிதல் கண்ட. தென்ப"
(தொல். பொருள். செய்யுள்.
சூ. ககூ)'

என இடையிற் றொக இறுதியின் உருபு வருதலும் நெறிபட வழங்கிய வழக்கைச் சார்ந்து வருதலான் வழுவாகா என்று ஓதி,

---

1. தொல். சொல். வேற்றுமை மயங்கியல். சூ. கஎ.
2. ,, ,, ,, ,, கஅ.
3. ,, ,, ,,
4. ,, ,, ,,

,, கசு.
,, உ௦. தொல்காப்பிய
முதற்சூத்திர விருத்தி
எக

உருபு தொகுமாறு
அதிகாரப்பட்டமையாற்

றொகாநிலைச் சொற்
களின். உருபு தொகுங்காற்
படுமுறைமை
“ஐயுங் கண்ணும்”
என்னுஞ் சூத்திரத்தால்
ஓதினர்.

இனி, இவ்வாறு அன்றி, "இறுதியும் இடையும்" என்னும் சூத்திரத்திற்குக், கடந்தா னிலத்தை, நிலத்தைக் கடந்தான் என வேற்றுமைத்தொடர் இறுதிக்கண்ணும் அதன் இடைநிலத்தும் உருபு நிலவுதலை வரையார் என்றுரைப்பின்,

"கூறிய முறையின் உருபுநிலை திரியா(து)

ஈறுபெயர்க் காகு
மியற்கைய வென்ப"
(தொல். சொல். வேற்றுமை
இயல், சூ. அ)
என்பதனுல் வேற்றுமைத்
தொடரின் யாண்டுப் பெயர்
நின்றது ஆண்டுப் பெயர்
இறுதியின் உருபு நிற்கும்.
என்பது தானே
பெறப்படுதலின்,
இச்சூத்திரம் வெற்றெனத்
தொடுத்தலாய் முடியும் என்க.

"கூறிய முறையின்

உருபுநிலை திரியாது"
என்றதனாற்
பெறப்படுவதனையே
"வேற்றுமை வழிய
பெயர்புணர் நிலையே"
(தொல். எழுத்து. புணரியல், சூ. கச)
என்பதனானும் கூறினார்க்கு, இதுவும் கூறஅமையும் பிற எனின், பிறாண்டுக் கூறுமாறுபோல வேற்றுமை உருபு என்னாமையானும்,

ஆறன் உருபு இறுதியிற் றொகின் "ஐயுங் கண்ணும்" என்னுஞ் சூத்திர விதியோடு முரணுதலானும், கூறியது கூறல் ஆக

லானும்,

“வேற்றுமை வழிய பெயர்புணர் நிலையே”
என்பதற்கு அது பொருளன்மையின், அமையாது என்க. மற்று என்னையோ ? அதற்குப் பொருள் எனின், நால்வகைச் சொற்

களும் இருவழியும் புணரும் என மேல் எய்தியதனை ஒருமருங்கு மறுத்துப் பெயர்ச்சொற் புணரு நிலையே வேற்றுமை வழிய ஆம் என்பது பொருள் எனக் கொள்க. ஏகாரம் பிரிநிலை என்க. எனவே, ஏனை வினைச்சொன் முதலிய மூன்றும் அல்வழிய ஆவன

முதற்சூத்திர விருத்தி

அன்றி வேற்றுமை வழிய ஆகா எனவும், பெயர்ச் சொற்கள் இரு வழியவும் ஆம் எனவும் கூறியவாறு ஆயிற்று.

இங்ஙனஞ் செம்பொருள் கொள்ளமாட்டாதார், பெயர் வழிய என மாறி, அவற்றுடன் என வருவித்துப் புணர்நிலை என்பதனையும் வேற்றெனத் தொடுத்தலாக்கிக், கூறியது கூறல் என்னுங் குற்றம்பட இடர்ப்பட்டுப் பொருள் உரைத்தார். இவ்வாறே யாண்டும் உரை செய்தல் அவர் இயல்பு என்க.

"சூத்திரந் தானே
யாடி நிழலி னறியத் தோன்றி
நாடுத லின்றிப் பொருள்நனி விளங்க
யாப்பினுட் டோன்ற யாத்தமைப் பதுவே"

(தொல். பொருள். செய்யுள்.

சூ கசுக)

என்ற ஆசிரியர் தாமே அங்ஙனம் பொருள் விளங்காது நாடி உய்த்துணர வைத்துச் சூத்திரஞ் செய்யார் என உணர்க. ஏனைச் சூத்திரங்களும் இவ்வாறே செம்பொருள் படுமாறு நுண்ணுணர்வாற் கண்டுகொள்க. "பிறிது பிறிதேற்றலும்" என்பதற்கு உரையாசிரியரை யுள்ளிட்டோர் உரைத்தவை போலி உரை என்பது மேற் கூறினும்.

அற்றேல் அஃது ஆக; "ஐயுங் கண்ணும்" என்னும் சூத்திரம் தொகாநிலைச் சொற்களின் உருபு தொகுங்காற் படும் முறைமை உணர்த்துதற்கு எழுந்தது என்றது என்னை? உருபு தொக்கன எல்லாம் தொகைச்சொல் எனப்படுமாலோ எனின், அற்றன்று. நிலங்கடந்தான், நாய்கோட்பட்டான், அறங் கறக்கும், வரை பாய்ந்தான், குன்றத் திருந்தான் என்பவற்றுள், உருபு தொக்கன ஆயினும், வினையொடு முடிதலின்,

"எல்லாத்தொகையு மொருசொன் னடைய"

(தொல். சொல். எச்ச இயல்,

சூ. ௩௪)

என்னுந் தொகை இலக்கணம் பெறது பக்கு இசைத்தலான், இவை தொகாநிலையே ஆம் என்க. செய்தான் பொருள், இருந்தான் மாடத்து என்பவற்றைத் தொகாநிலைச்சொல் எனக் கொண்டமையாற் சேனாவரையர்க்கும் இதுவே கருத்துப்போலும் என்க. நிலம் கடந்தான், நாய்கோட்பட்டான் என்பன ஒருசொல் நீர்மைய என்பார்க்கு நிலத்தைக் கடந்தான், நாயாற்

# தொல்காப்பிய

# முதற்சூத்திர விருத்தி

எ ந

கோட்பட்டான் என்பவற்றோடு இவற்றிடை வேற்றுமை இன்மையின், அவையும் தொகைச்சொல் ஆவான் செல்லுமாறு அறிக.

அற்றேல்,

"பெயரி னாகிய

தொகையும்"

(தொல். சொல்.

என்ற உம்மையாற் பெயரொடு வினை என்பது பெறப்படுமாலோ எனின்,

"அவ்வு முரிய"

(தொல். சொல்.

வேற்றுமை இயல், சூ. சு)

தொக்க தொகையும் உள

வேற்றுமை இயல், சூ. சு)

என்பதற்கு ஏலாமையானும், வடநூலோடு மாறுகோடலானும், அவ்வும்மைக்கு அது பொருள் அன்று. மற்று என்னை? பொருள் எனின், விகுதியின் ஆகிய பெயரும் உள, அவையும் உரிய என்பது பொருள் எனக் கொள்க. வடமொழியுள் உபசர்க்கத்தோடு வினை தொக்க தொகையும் உள என யோக விபாகத்தாற்[1] கொண்டது, வேதத்துள் இசைபற்றி ஒரோவழி அவ்வாறு கொள்ளவேண்டுதலான் என்க. அற்றேல், வேற்றுமைத் தொகைக்கண் உருபு தொகும் என்பது யாண்டுப் பெறுதும் என்பாரை, உவமத்தொகைக்கண் உவம உருபு தொகுதல் யாண்டுப் பெற்றீர் எனக் கடாவி மறுக்க. தொகை எனவே, உருபு தொகுதலும் தானே போதரும்.

'என்ப'

இனி, 'என்ப' என்பது பகரவீற்றுப் பலர்அறி சொல்.

அற்றேல், என்ப என்னும் அகரவீற்றுப் பலஅறிசொல் லோடு இதனிடை வேற்றுமை யாதோ? எனின், அகர ஈறு, என்பன, என்ப என்றாற்போல அன் பெற்றும் பெறாதும், இடை நிலை வகையாற் காலம் காட்டி, முக்காலத்தினும் வரும். பகர ஈறு அவ்வாறு அன்றி, ஈற்று வகையான் எதிர்காலம் காட்டி, முதனிலையும் ஈறுமாகவே பகுக்கப்பட்டு வரும். இவை தம்முள் வேற்றுமை என்க.

---

1. யோகம் - சூத்திரம். விபாகம் - ஒரு சூத்திரத்தைப் பகுத்து முற் பகுதிக்கு ஒரு பொருளும், பிற்பகுதிக்கு வேறு பொருளும் கூறுதல்.



அற்றேல் அஃதாக; எழுத்து எனப்படும் என்றல் முக்காலத் தினும் ஒத்து இயல்வதாகலின்,

"முந்நிலைக்

காலமுந் தோன்றுமியற்கை”
(தொல். சொல். வினை இயல்,
சூ. ௪௩)

என்னும் சூத்திரவிதிபற்றி நிகழ்காலப் பொதுச் சொல்லாற் கூறல்வேண்டும்; அன்றித் தொல்லாசிரியர் குறியீடு என்னும் கருத்துவகையாற் கூறினும், இறந்தகாலத்தாற் கூற அமையும்; அவ்வாறு அன்றி, என்ப என எதிர்காலத்தாற் கிளந்தவாறு என்னை? எனின், நன்று வினாயினாய்.

“முந்நிலைக்
காலமுந் தோன்றுமியற்கை”

என்னும் சூத்திரம் வடமொழி மதம்பற்றிக் கூறினர்; தந் துணி புரைத்தல் அன்று; இறப்பினு நிகழ்வினும் உண்மை நிகழ்ச்சி யான் அறியக்கிடத்தலின் எதிர்காலத்தினும் உளதாதல் உணர்ந் தன்றி, முக்காலத்தினும் நிலைபேறுடைமையுணர்ச்சி கூடாமை யின். அதுபற்றி எதிர்காலச்சொல்லாற் கிளத்தல் தமிழ்நடை என்பது ஆசிரியர் துணிபு என்றற்கு, 'எழுத்தெனப்படுப, வகர முதல், னகர விறுவாய் முப்பஃ தென்ப' என்றாற்போல யாண்டும் உடம்பொடு புணர்த்து விதித்ததே சான்றாதல் அறிக. "மூந் நிலைக் காலமும்" என்பதுபற்றி ஆசிரியர் நிகழ்காலச் சொல் லான் ஓரிடத்தும் கிளவாமையும் அறிக. அற்றேல், வடமொழி வழக்கொடு மாறுகொள்ளுமாலோ எனின், அறியாது கடாயி னாய். ஒரு மொழியுள்ளும் தேய வேற்றுமைபற்றி வேறு வேறு வழங்குதல் இயல்பாதலின், இன்னோரன்னவை மாறுகோள் அல்ல என்க.

# 'நூலோர்'

## நூலோர் என்பது

## சொல்லெச்சம்.

அற்றேல், பொருள் உணர்ந்தன்றிச் சொல் வருவித்தல் கூடாது? பொருள் உணர்ந்த பின்னர்ச் சொல் வருவித்தலாற் பெறப்படுவதோர் பயன் இல்லை; ஆதலாற் சொல்லெச்சம் வரு வித்தல் வேண்டா பிற எனின், சொற்றொடர் உணர்ச்சி சொல் லான் அன்றிப் பெறப்படாமையின், ஒருதலையான் வேண்டும் என்க.

தொல்காப்பிய
முதற்சூத்திர விருத்தி
௭௫

என்ப + சார்ந்து = 'என்ப சார்ந்து'

'என்ப சார்ந்து'

என்னும் நிலையாத் தொடர்,

"உயிர் ஈறாகிய உயர்திணைப் பெயரும்"

(தொல். எழுத்து. தொகை மரபு, சூ. ௧௧)

என்ற சூத்திரத்து இலேசானே இயல்பாய் முடிந்தது.

“குற்றிய லிகர நிற்றல் வேண்டும்”

(தொல். எழுத்து. மொழிமரபு, சூ. ௧.)

என்றற்றொடக்கத்துச் சூத்திரங்களாற் பெறப்படுதலின், ஈண்டுச் சார்ச்சிக்குச் செயப்படுபொருள் கூறாராயினர்.

**‘சார்ந்து வரல்’**

‘சார்ந்து வரல்’ என்புழிச் சார்ந்து என்னும் வினையெச்சம் வரல் என்னும் தொழிற்பெயரின் வா என்னும் முதனிலையோடு முடிநதது.

“வினை யெஞ்சு

கிளவிக்கு வினையுங் குறிப்பும்''
(தொல். சொல். எச்ச இயல், சூ. ௩௬)

என்புழி, ஆண்டு வினை என்றது முதனிலை உரிச்சொல்லே ஆகலின், விகுதி எவ்வாற்றான் வரினும் அதுபற்றி ஆராய்ச்சி வேண்டா எனக் கொள்க.

''எதிர்மறுத்து மொழியினும் பொருணிலை திரியா''
(தொல். வினையியல், சூ. ௩௩)

என்றதூஉம் இக்கருத்தேபற்றி என்பது. இன்னும் வினையெச்ச முடிபு வேறுபாடுகள் எல்லாம் பாயிர விருத்தியுள் உரைத்தாம், கடைப்பிடித்துக் கொள்க.

வரல்+
மரபு='வரன்மரபு'
'வரன்மரபு'[1] என்புழி
"மெய்யெழுத்தியையின்"
என்றதனால் லகாரம்
னகாரமாயிற்று.

'மரபின்மூன்று'

1. தொல். எழுத்துப் புள்ளி மயங்கியல், சூ. எ௨.

'மரபின் மூன்று'[1] என்பது "மெய்பெற"[2] என்றதனுனே சாரியை உள்வழித் தன்னுருபு நிலையாது வந்தது.

'மரபின' என்பது பாடமாயின், மரபினை உடையனவாகிய மூன்று என உரைக்க. மரபின என்பது மரபு என்னும் பண்படியாகத் தோன்றிய பெயர்.

## சொல்நிலை வேறுபடுதலின் காரணம்

அற்றேல்,
வினைக்குறிப்போடு
இதனிடை வேற்றுமை

யாதோ ? எனின், வினைக்குறிப்புச் சொல்லெல்லாம் தெரிநிலை வினை போல முதனிலையிற் பொருள் சிறந்து நிற்கும். பெயர்ச் சொல் அவ்வாறன்றி விகுதியிற் பொருள் சிறந்து நிற்கும். உண் டான் சாத்தன், கரியான் சாத்தன் என்புழி வினைச்சொற்கள் முதனிலையிற் பொருள் சிறத்தலின், விகுதிப்பொருள் வேறு விள்க்குதற்குச் சாத்தன் என்னும் பெயர் ஒருதலையான் வேண் டப்பட்டது. இக்கருத்தேபற்றி ஆசிரியர்,

"எத்திறத் தானும்
பெயர்முடி பினவே"
(தொல். சொல். எச்ச இயல்,
சூ. ௩௩)

என்றார்.

இனி, உண்டான், கரியான் என்னும் பெயர்ச்சொற்கள்[3] விகுதியிற் பொருள் சிறத்தலின், அப்பொருளை விளக்குதற்கு வேறோர் பெயர் வேண்டாது, உண்டான் வந்தான், உண்டானைக் கொணு, கரியான் வந்தான், கரியானைக் கொணு எனத் தாமே

எழுவாயாய்ப்

நின்றன.

பயனிலை ஏற்றும்,

ஐ முதலிய உருபுகள்

ஏற்றும்

எல்லாச் சொற்களையும்

கூறுங்காற் பொருள்

சிறக்கும்

இடத்து எழுத்தினை எடுத்தும், அயல் எழுத்தினை நலிந்தும், ஏனை எழுத்துக்களைப் படுத்தும் கூறுக. எடுத்தல் படுத்தல்

முதலிய ஓசைகளும் எழுத்துச் சாரியையும் இன்னோரன்ன பிறவும் தனித்து இயங்கும் ஆற்றல் உடைய உயிர்க்கே யன்றி

# அவ்வாற்ற லில்லாத மெய்க்கு இல்லை என உணர்க.

1. தொல். நூன்மரபு, சூ. க.
2. தொல். தொகைமரபு, சூ. கரு.
3. ஈண்டுப் பெயர்ச்சொற்கள் எனக் கூறப்பட்ட இவை வினையாலணையும் பெயர்.

# தொல்காப்பிய மூதற்சூத்திர விருத்தி

# என

'னகர விறுவாய்'[1] 'வகார மிசையும்'[2] 'வஃகான் மெய்கெட'[3] என்புழி வருவன மெய்யை இயக்க வந்த அகரத்தின் சாரியை எனக் கொள்க.

இச்சொல் இயல்பு உணராது, எழுத்து ஒப்புமையான் மயங்கி, வினைக்குறிப்பு முற்றுக்களை ஓசைவேறுபாட்டாற் பெயராம் என்பாரும் உளர். ஒரு காரணம் இன்றி ஓசை வேறு படுதல் பொருந்தாது. பெயராய ஆற்றால் ஓசை வேறுபட்டது எனின், ஓசை வேறுபட்ட ஆற்றாற் பெயராயிற்று; பெயராய ஆற்றால் ஓசை வேறுபட்டது என ஒன்றனை யொன்று பற்றுதல் என்னும் குற்றமாம் என ஒழிக. பொருள்நிலை வேறுபாட்டாற், சொல்லும் வேறு எனவே கொள்க. அங்ஙனம் ஆயினும் சொற் சுருங்குதற்பொருட்டு எழுத்து ஒப்புமைபற்றிப் பல பொருள் ஒரு சொல் என்ப. நடந்தான், குழையான் என்னும் வினை வினைக்குறிப்புமுற்றுச் சொற்களும் வேறு, நடந்தான், குழை யான் என்னும் பெயர்ச்சொற்களும் வேறு என்பதே ஆசிரியர் கருத்து ஆதல், "நிலப்பெயர் குடிப்பெயர்"[4] என்றற் றொடக் கத்துச் சூத்திரங்களை வினையியலுட் கூறாது, பெயரியலுட் கூறிய ஆற்றானும்,

**"நிலப்பெயர் குடிப்பெயர்**
**குழுவின் பெயரே**
**வினைப்பெய ருடைப்பெயர்"**
**(தொல். சொல். பெயரியல்,**
**சூ. கக)**

என வினைப்பெயரை இவற்றுடன் எண்ணலானும் அறிக. வரையர்க்கும் இதுவே கருத்தாதல்,

சேனு

"நிலப்பெயர் குடிப்பெயர்" என்னும் சூத்திரத்துள் "வினைப் பெயர், வருவார் செல்வார் என்பன; தச்சன் கொல்லன் என்பன வும் அவ்வ" எனக் காட்டிய உதாரணங்களானும்,

"பெயர்நிலைக் கிளவி காலந் தோன்ரு" (தொல். சொல். பெயர் இயல், சூ. கக.)

என்னும் சூத்திரத்துள் "உண்டான், தின்ருன் என்னும் தொடக்கத்துப் படுத்துச் சொல்லப்படும் தொழிற்பெயர் வினைச்

1. தொல். எழுத்து. நூன்மரபு, சூ. க.

2. ,, ,,

புள்ளிமயங்கியல், சூ. ௩௫.

3. ,, ,,

புணரியல், சூ. ௨௦.

4. சொல்.

பெயரியல், சூ. ௧௧.

௭அ தொல்காப்பிய

முதற்சூத்திர விருத்தி

சொற்போலத் திணையும் பாலும் காலமும் முதலாயினவற்றை விளக்கி, அன் ஆன் முதலிய ஈற்றவாய் வருதலின் தொழில்நிலையொட்டும் என்றார். ஒட்டும் என்பது உவமச்சொல் என்னும் உரையானும் அறிக. வினைச்சொற்போல எனவே, இவை வேறு சொல்லென்பது பெறப்பட்டது. பண்படியாக வரும் பெயர் பண்புப் பெயர் என்றாற்போல, வினையடியாக வரும் பெயர் வினைப்பெயர் என்பதே சேனாவரையர்க்குங் கருத்து.

வடநூலார் முதனிலையைப் பிரகிருதி எனவும், விகுதி இடைநிலை வேற்றுமை உருபுகளைப் பிரத்தியயம எனவும், அவற்றுட் பெயர் முதனிலையைப் பிராதிபதிகம் எனவும், வினைமுதனிலையைத் தாது எனவும், பெயர் விகுதியைத் தத்திதம் எனவும், வினைமுதனிலைமேல் வரும் பெயர் விகுதியைக் கிருத்து எனவும், வினைமுற்று விகுதியைத் திங்கு எனவும், வேற்றுமை உருபுகளைச் சுப்பு எனவும், இடைநிலையை விகரணி எனவும் கூறுப. வடமொழி வினைச்சொற்களுள், விகுதியே காலங்காட்டும் ஆகலின், இடைநிலை வினைமுதற்பொருண்மை முதலியன பற்றி வரும் வினைக்குறிப்பு வடமொழிக்கு இன்று. இவை எல்லாம் முதனிலையும் ஈறுமாகப் பகுக்கப்படுதல் பற்றிப் பின்னுள்ளோர் இவற்றைப் பகுபதம் எனப் பெயரிட்டு வழங்குப.

# இனி,

"யாருமில்லை தானே கள்வன்" என்பதனுட் 'கால' என்பதுபோல மரபின என்பதும் மரபினை உடைய எனப் பெயரெச்ச வினைக்குறிப்புச் சொல் என்றலும் ஒன்று. அற்றேல், கால என்புழி அகரம் பால்காட்டும் ஈறு என்றுற் படும் இழுக்கு என்னை? எனின், அஃது உண்டு என்னும் ஒருமைச்சொற் கொண்டு முடிதலிற் பால் வழுவாய் முடியும் என்க. இவ்வுண்டு என்னும் சொல் ஐம்பான் மூவிடத்திற்கும் பொது அன்றோ? எனின், அறியாது கடாயினாய். உளன், உளள், உளர் என்பன போலக் குறிப்பு உணர்த்தி இன்று என்பதற்கு மறுதலையாய், அஃறிணை ஒருமைக்கு உரிய குவ்விகுதி பெற்று நிற்கும் உண்டு என்னுஞ் சொல்லும் வேறே; இல் என்பதற்கு மறுதலையாய் உண்மைத்தன்மை உணர்த்தி வேறு, இல், யார், எவன் என்பன போல விகுதி இன்றிப் பொதுச் சொல்லாயே நிற்கும் உண்டு என்னும் சொல்லும் வேறே எனக் கொள்க. இது யார் எ... வகரம் கெட்டு நிற்கும் பலர் அறி சொல்லும் வேறே; என்னும் வினாவினைக்குறிப்பும் வேறே. ஆமாறுபோலக் ெ

“தினைத்தா ளன்ன சிறுபசுங் கால
வொழுகுநீ ராரல் பார்க்குங்
குருகு முண்டு”

என்புழி உண்டு என்பது குறிப்பு உணர்த்தி நிற்றலின், ஒருமைச்சொல்லே ஆம் என உணர்க.

அஃது

அற்றேல், ‘கால, குருகு’ என்பது பன்மை ஒருமை மயக்கம் எனக் கோடும் எனின், அற்றன்று;

‘மாடமது

வார்சடைய வள்ளலையு

மொக்கும்''

என உயர்திணைக்கண்ணும் பயின்று வருதலின், ஒரு காரணம் இன்றித் திணை மயங்குதல் பொருந்தாமையின், இன்னோரன்னவை எல்லாம் பெயரெச்ச வினைக்குறிப்பே ஆம் என்க.

## 'மூன்று'

இனி, 'மூன்று' என்பது ஆகுபெயரான் அத்தொகை உடையவற்றை உணர்த்திற்று. இது, ''கிளந்தவல்ல''[1] என்னும் ஆகுபெயர்ப் புறனடையாற் கொள்க. இதனை ஆகுபெயர் அன்று என்பாரும் உளர். நெல்லை அளந்து பார்த்தும் பொன்னை நிறுத்துப் பார்த்தும் அன்றி அவற்றிற்குப் பதக்குத் தொடி என்று அளவும் நிறையும் ஆகிய பெயர் கூறப்படாமைபோலப் பத்துப் பொன்னையும் எண்ணிப் பார்த்தன்றி அவற்றிற்குப் பத்து என்னும் பெயர் கூறப்படாமையானும், ''ஆறறி யந்தணர்''[2] என்புழி ஆறு என்னும் வரையறைப் பண்புப்பெயர் அப் பண்பினை யுடைய அங்கந்தினை உணர்த்த ஆகுபெயராய் நிற்கும் எனக் கூறிய நச்சினார்க்கினியார்க்கு எண்ணுப்பெயர் ஆகுபெயர் ஆதற்கு ஏலாது என்றது கருத்து அன்று ஆகலானும், எண்ணுப் பெயரும், எண்ணப்படும் பொருளை உணர்த்தும்வழி ஆகுபெயரே ஆம் என்க. இன்னும் உயர்திணைக்கண் மூவர் என விகுதி நின்றே பொருளை உணர்த்துதலான், அல்வழி ஆகுபெயராயே நின்று பொருளை உணர்த்தும் என உணர்க. இன்னோரன்னவற்றிற்கெல்லாம் வடநூலார் விகுதி நின்று கெட்டது என்பர்.

அல் + அம் + கடை = 'அலங்கடை

தொல். சொல். வேற்றுமை
மயங்கியல், சூ: ௧௪.
வித்தொகை
கடவுள் வாழ்த்து,

௮௦ தொல்காப்பிய
முதற்சூத்திர விருத்தி

இனி, அல் கடை என்னும் கடையீற்று வினை எச்சக்குறிப் புச்சொல் அம்முப்பெற்று அலங்கடையென நின்றது.

ஏகாரம் ஈற்றசை.
இன்னும் விரிக்கிற்
பெருகும் ஆகலின் அமைக.
சொல்லிலை

ஒருவகையாற் காட்டப்பட்டது. குற்றியல் உகரம் முதலியவற்றிற்குச் சார்பு

"குற்றிய லிகர நிற்றல் வேண்டும்"

(தொல். எழுத்து-மொழிமரபு, சூ, க)

என்றற் றொடக்கத்து வரும் சூத்திரங்களால் உணர்க. இவை மொழிக்கட் படுத்துக்காட்ட வேண்டுதலின், ஈண்டு வையாது மொழிமரபில் வைத்தார். அற்றேல், மயக்கச் சூத்திரங்களும் ஆண்டு வைக்க எனின், அற்றன்று.

"பன்னீ ருயிரு மொழிமுத லாகும்"

# தொல். எழுத்து. மொழிமரபு,

# (சூ. ௨௯)

# "உயிர்ஔ

# வெஞ்சிய விறுதி யாகும்"

# (தொல். எழுத்து.

# மொழிமரபு, சூ ௩௯)

என்பனபோல இடையே வரும் என்றது, இவ்வெழுத்திற்கு இவ்வெழுத்து நட்பு; அல்லன பகை என்னும் துணையானே கருவி செய்தலின், இவை யீண்டே வைக்கப்பட்டன. இஃது அறியாதார் தத்தமக்கு வேண்டியவாறே உரைப்ப. ஆசிரியர் நட்பெழுத்துப் பகை எழுத்து ஆமாறு ஈண்டுக் கூறி, இனம் ஆமாறு பிறவியலாற் கூறுவர். அற்றேல், பிறப்பியலை நூன் மரபிற் கூறுக எனின், பிறவி கூறி இன மடைக்க வேண்டுதலானும், விரிவு உடைமையானும். வேறு ஓர் ஓத்தாகக் கூறினார் என்பது. அற்றேல், பிறப்பியலை நூன்மரபினைச் சாரவைக்க எனின், அற்றன்று; மொழிமரபிற் கூறும் விதி எல்லாம் நூன் மரபின் ஒழிபு ஆகலான், அஃது அதன்பின்னர் வைத்துப் பிறப் பியல் அவற்றின்பின் வைக்கப்பட்டது.

# மொழிமரபிற் கூறும்

விதிகள் நான்மரபின் ஒழிபு

ஆமாறு

"குற்றிய லிகர

நிற்றல் வேண்டும்"

(தொல். எழுத்து.

மொழிமரபு

தொல்காப்பிய

முதற்சூத்திர விருத்தி

அ என்பது முதல்

"உருவினு

மிசையினும்"

(தொல். எழுத்து. மொழிமரபு, சூ. எ)
என்றுஞ் சூத்திரங்காறும்,

"அவைதாம்"[1] என்பதன் ஒழிபு. "குன்றிசை",[2] "ஐ ஔ"[3] இரண்டும் "நீட்டம்"[4] என்பதன் ஒழிபு. "நெட்டெழுத்தேழே,"[5] என்பது, "அவற்றுள், அ இ உ எ,"[6] "ஆ ஈ ஊ ஏ"[7] என்பவற்றின் ஒழிபு. மொழியாக்கம் அதிகாரப்பட்டமையின் ஓரெழுத்தொருமொழி என்பதும் உடன் கூறினர். "மெய்யி னியக்கம்"[8] என்பது "னகார விறுவாய்"[9] என்பதன் ஒழிபு. "தம்மியல் கிளப்பின்"[10] என்பது முதல் "மகரத் தொடர்மொழி"[11] என்றும் சூத்திரங்காறும் மயக்கச் சூத்திர ஒழிபு எனக் காண்க. இத்துணை விரிப்பிற் பெருகும்; உய்த்துணர்ந்து அமைத்துக் கொள்க.

தோல்காப்பிய முதற்சூத்திர விருத்தி அறுவையு
பாலவேட்டு ஒருவகையான் முடிந்தது.

---

மொழிமரபு, சூ. அ.

,, சூ. கூ.

நூன்மரபு, சூ. ரு.

மொழிமரபு, சூ. க0.

நூன்மரபு, சூ. ௩.

,, சூ. ௪.

,, சூ. க௩.

,, சூ. க.

மொழிமரபு, சூ. க௪.

,, சூ. ௪கூ.